லாங்மன்ஸ்



# தமிழ்ப் பாடம்

## எட்டாம் புத்தகம்

ம. வீ. இராமாநுஜாசார்யர்

லாங்மன்ஸ்

# தமிழ்ப்பாடம்

## எட்டாம் புத்தகம்

கும்பகோணம் கவர்ன்மெண்ட் காலேஜ் ரிடயர்ட் தலைமைத் தமிழ்ப்
பண்டிதரும் தமிழ் மஹாபாரதப் பதிப்பாசிரியருமாகிய
பாஷாபாரத துரந்தர, மஹா மஹோபாத்தியாய,
ம. வீ. இராமானுஜாசார்யர்
இயற்றியது.



லாங்மன்ஸ் க்ரீன் அண்ட் கம்பனி, லிமிடெட்
36A, மௌண்ட் ரோட், மதராஸ்,
கல்கத்தா, பம்பாய்.
1937

ஶ்ரீ:

# முகவுரை

'லாங்மன்ஸ் தமிழ்ப்பாடம்' என்ற இந்த வரிசையில் முன்னமே வெளிவந்துள்ள ஏழு புத்தகங்களும் எந்த நோக்கத்துடன் எழுதப்பட்டனவோ அந்த நோக்கத்துடனேயே இதுவும் எழுதப்பட்டுள்ளது.

தாய் மொழிப்பயிற்சியில் நம் நாட்டினர் பெரிதும் பின்னடைந்திருப்பதற்கு முதற்காரணம் மூலாதாரக்கல்வி பயிலுங்காலத்திலேயே தாய்மொழிப்பற்று உண்டாகும் முறையில் கற்பிக்கப்பெறாமையே என்பது பல அறிஞர்களது கருத்து. ஆதலின், அக்குறையை நீக்கத் தக்க முறையிலேயே இப்புத்தகமும் அமைந்துள்ளது.

இப் புத்தகத்தில் பாடமாக அமைந்துள்ள விஷயங்கள் சிறுவர் சிறுமியர்க்குக் கற்பதில் உற்சாகமூட்டுவனவும் அவர்களுடைய பிற்காலவாழ்க்கைக்கும் பயன்படக்கூடியனவும் ஆம். இதனுள் இன்றியமையாத இடங்களில் படங்களும் சேர்க்கப்பட்டுள்ளன.

இப் புத்தகத்திலும் இதற்கு முந்திய புத்தகங்களிலும் சில சரித்திரங்கள் எழுதிச் சேர்க்கப்பட்டுள்ளன. அவை ஆராய்ச்சி முறையிலன்றி, சிறுவர்சிறுமியர் பாஷை வளர்ச்சியின் பொருட்டு உற்சாகத்துடன் படித்து அறிந்து கொள்ளும் முறையில், தமிழுலகில் பெரும்பாலும் வழங்கிவருகிறபடியே எழுதப்பட்டுள்ளன.

மஹாவித்வான், ப்ரம்மஶ்ரீ, மஹாமஹோபாத்தியாய, டாக்டர் வே. சாமிநாதையரவர்கள், தாங்கள் எழுதிய 'ஆளுக்கேற்ற மதிப்பு', 'பரம்பரைக்குணம்' என்னும் இவ்விரண்டு கதைகளையும் இப்புத்தகத்தில் சேர்த்துக் கொள்ளும்படி பெருங்கருணையுடன் அனுமதியளித்திருக்கிறார்கள். அவர்கள் அடியேன்பால் காட்டிவரும் பேரன்பிற்கு அடியேன் பெரிதும் கடமைப்பட்டிருக்கிறேன்.

இதனைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் இதனுள் செய்யப்பெறவேண்டிய சீர்திருத்தங்களை, தயைசெய்து தெரிவிப்பார்களானால், அவற்றை, வந்தனம்செய்து ஏற்று அடுத்த பதிப்பில் இயன்றவரை செய்விக்க முயல்வேன்.

இங்ஙனம்,

ம. வீ. ரா.

## பொருளடக்கம்



## செய்யுட்பகுதி

# 1. கம்பர்

சோழவளநாட்டிலே, குற்றாலத்திற்குத் தெற்கே மூன்றுமைல் தூரத்தில், திருவழுந்தூர் என்ற ஓர் ஊர் இருக்கிறது. அஃது, இந்நாளில் தேரழுந்தூர் என்று வழங்குகிறது. கம்பர் அந்த ஊரிலிருந்த ஆதித்தன் என்பவருக்குப் புத்திரராகப் பிறந்தார். அவர் உவச்சகுலத்தைச் சேர்ந்த ஒருவனால் வளர்க்கப் பெற்றவர் என்பர்.

கம்பர், திருவெண்ணெய்நல்லூரிலிருந்த பெருஞ் செல்வரும் வள்ளலுமாகிய சடையப்பர் என்னும் வேளாளரால் ஆதரிக்கப் பெற்றவர்; அவருடைய பேருதவியால் கல்விகேள்விகளில் தேர்ந்தவரானார்; கவிபாடுவதிலும் சிறந்தவரானார்.

சோழமன்னன், கம்பரது மேம்பாட்டைப் பலரும் புகழ்ந்துகூறுவதைக் கேள்வியுற்றான்; அவரைத் தன் சபைக்கு வருவித்து ஸம்ஸ்தான வித்துவானாக அமர்த்திக்கொண்டான். கம்பரும் அரசன் தமது திறமையை அறிந்து மகிழுமாறு நடந்துகொண்டார்.

கம்பரை இளமையில் ஆதரித்த சடையப்பவள்ளலாருக்கு வடமொழியிலுள்ள வால்மீகிராமாயணத்தைத் தமிழிலே கவிதையாகக் கேட்கவேண்டுமென்று விருப்பம் இருந்தது. அதனால், அவர், கம்பரை அவ்வாறு செய்யும்படி தாம் கேட்டுக் கொண்டதுமல்லாமல், அவரைக் கேட்டுக்கொள்ளும்படி சோழமன்னனையும் வேண்டினார். அவ்விருவரும்

வேண்டிக்கொண்டதாலும், தமக்கும் அங்ஙனம் பாடுவதிலே ஆசை அதிகமாயிருந்ததாலும், கம்பர் ஸ்ரீராமபிரானுடைய சரித்திரத்தைத் தமிழிலே பாடல்களாகப் பாடி, அதற்கு, 'இராமாவதாரம்' என்று பெயரிட்டார். அது, கம்பராமாயணம் என்ற பெயருடன் இப்பொழுது வழங்கிவருகின்றது. இதனால், 'கல்வியிற் பெரியவன் கம்பன்' 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்ற புகழ் மொழிகள் நிலைபெறலாயின.

சரஸ்வதியந்தாதி, சடகோபரந்தாதி, ஏரெழுபது, திருக்கைவழக்கம் முதலிய வேறுசில சிறு நூல்களும் கம்பர் இயற்றியவை என்று வழங்குகின்றன. கம்பரால் பாடப்பட்ட தனிப்பாடல்களும் பல.

கம்பர் தமக்குப் பிறர் செய்த நன்றியை மறவாது பாராட்டும் அருங்குணமுள்ளவர். அவர், தாம் பாடிய இராமாயணத்திலே தம்மை ஆதரித்த சடையப்பவள்ளலைப் பல இடங்களில் சிறப்பித்துப் பாடியுள்ளார். கம்பரது கல்விச்சிறப்பையும் கவிபாடும் திறமையையும் அறிந்த சோழமன்னன், அவருக்குப் பல பரிசுகளையும் பட்டங்களையும் அளித்துப் பலரறியக் கொண்டாடினன்.

ஒருநாள், கம்பரும் சோழனும் ஒரு பூங்காவில் உலாவிக்கொண்டிருந்தனர். சோழன், அங்கிருந்த காட்சிகளைக் கண்டு மகிழ்ந்து கலகல எனச் சிரித்தான். கம்பர், அரசனை நோக்கி, "மன்னரே! நீர் இப்பொழுது சிரித்ததற்குக் காரணம் யாது? நான் தெரிந்துகொள்ளலாமாயின், கூறவேண்டுகிறேன்"

என்றார். அரசன், "புலவரே! நீவிர் அறிந்து கொள்ளக்கூடாததும் உண்டோ? 'இந்த நாடும் இதிலுள்ள மக்களும் செல்வம் முதலியனவும் நமக்கு அடக்கமல்லவா?' என்று எண்ணினேன்; அந்த எண்ணத்திலேயே சிரித்தேன்" என்று சொன்னான்.

இதைக் கேட்ட கம்பர், "ஆம்; எல்லாம் உமக்கு அடங்கியவை என்பதிலும், நீர் நமக்கு அடங்கியவர் என்பதிலும் என்ன சந்தேகம் இருக்கின்றது?" என்று கூறித் தாமும் நகைத்தார். அரசனுக்கு வெகுளி பொங்கியது. ஆயினும், அவன் அதனை வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல் அரண்மனைக்குச் சென்றான். அது காரணமாகக் கம்பருக்கும் சோழனுக்கும் மனவேறுபாடு உண்டாயிற்று. ஒருநாள், சோழன், கம்பரை நோக்கி, "நீர் இன்றுமுதல் எனது நாட்டில் இருத்தல் கூடாது. நான் உமக்கு அளித்த விருதுகள் முதலிய எல்லாவற்றையும் கொடுத்துவிட்டு வெளியே போவீராக" என்றான்.

உடனே, கம்பர், சோழன் அளித்த எல்லா விருதுகளையும் ஆடை ஆபரணங்களையும் அவனிடம் கொடுத்தார். அவர், அவனை நோக்கி, "அரசரே! உமது நாடு இருபத்து நான்கு காதமே உள்ளது. அதற்கப்பால் உள்ள பூமியைக் கடல் கொண்டு போய்விட்டதோ? மேலும், நீர்சொந்தமாக ஏதேனும் நிலத்தைச் சேர்த்துக்கொண்டது உண்டோ? உம்முடைய நாடுதான் வளமுடையதோ? நீர் கோபித்துக் கொண்டால் எங்களுக்கு வேறு இடம் இல்லையோ?

உலகத்திலுள்ள அரசர்கள் அனைவருள்ளும் நீர் தாம் சிறந்தவரோ? உம்மிலும் சிறந்த மன்னர்கள் இலரோ? என்னை விரும்பி ஏற்றுக்கொள்ளாத அரசர்களும் இருக்கிறார்களோ? இப்பொழுதே இவ்விடம் விட்டுப் புறப்படுகிறேன். உம்முடைய பொருளாக என்னிடத்தில் ஒன்றும் இல்லை என்பதைத் தெரிந்துகொள்ளும். மற்றொரு சமயம் நான் உம்மிடத்தில் வரநேர்ந்தால், அப்பொழுது, உம்மிடத்தில் கப்பம் வாங்கும் ஓர் அரசனை எனக்குத் தாம்பூலம் மடித்துக் கொடுக்குமாறு அழைத்துக் கொண்டு வருவேன்" என்று சொல்லிச் சபையை விட்டு நீங்கினார். அவர், வழியிலே பல கஷ்டங்களை அனுபவித்து ஓர் வேளாளரின் ஆதரவிலே சிறிது காலம் தங்கினார்; தமது கருத்தை நிறைவேற்ற விரும்பிச் சேரனை அடைந்து அவனிடத்தில் அடைப்பைத் தொழிலில் அமர்ந்தார்.

சேரன், ஒருநாள், தனது ஸம்ஸ்தான வித்துவான்களை அழைத்துக் கம்பராமாயணப் பிரசங்கம் செய்யச்சொன்னான். அவர்களும் தங்களுடைய கல்வியறிவின் அளவுக்கேற்பப் பாடல்களுக்குப் பொருள் கூறினார்கள். அரசன், சபையிலுள்ளோர் எப்படிப் பிரசங்கத்தைக் கேட்கிறார்கள் என்று தெரிந்துகொள்ள விரும்பிச் சூழ்ந்துள்ளவர்களின் முகங்களை உற்றுநோக்கினான்; எல்லாரும் முக மலர்ச்சியுடன் கேட்டுக்கொண்டிருக்க, அடைப்பைத் தொழில் செய்யும் கம்பர் மாத்திரம் முகம் வேறுபட்டிருக்கக் கண்டான்.

அரசன், அடைப்பைக்காரனாகிய கம்பரைப் பார்த்து, "உன்முகம் மாறுபடக் காரணம்யாது? எல்லாரும் முகமலர்ச்சியுடன் இருக்கின்றனரே" என, அவர், "வேந்தரே! நான் கம்பர் செய்த பிரசங்கங்களைப் பலசமயங்களில் கேட்டுள்ளேன். அவர் கூறியவற்றிற்கும் இவர்கள் கூறுகின்றவற்றிற்கும் மிக்கவேறுபாடுகள் இருக்கின்றன. அவைகளே எனது முகவேறுபாட்டிற்குக் காரணம்" என்றார். அரசன், "அப்படியானால், நீ கம்பராமாயணப் பிரசங்கம் செய்யவல்லையோ?" என்று கேட்டான். அடைப்பைக்காரனாக இருந்த கம்பரும், 'ஒருவாறு செய்வேன்' என, அரசன், 'செய்க' என, அன்றுமுதல் கம்பர் இராமாயணப் பிரசங்கம் செய்யலாயினர். அவர் இராமாயணச் செய்யுட்களிலுள்ள பலவகைப்பட்ட நயங்களையும் அழகுகளையும் திறம்பட எடுத்துக் காட்டிக்கொண்டு வரவே, சேரமன்னனுக்கு அவர்பால் மிக்க அன்பும் மதிப்பும் உண்டாயின. அதனால், அவ்வேந்தன் அவரை அதிக மரியாதையுடன் நடத்திவரலானான்.

இந்நிகழ்ச்சியால் சேரநாட்டுப் புலவர்களுக்கு அந்த அடைப்பைக்காரனிடத்தில் பொறாமையுண்டாயிற்று. அவர்களெல்லாரும் ஒன்றுகூடி, அரசனுக்கு அவரிடத்திலுள்ள பற்றுக் குறைவதற்காக, அடைப்பைக்காரனாயிருப்பவன் அரண்மனை மயிர்வினைஞனுக்குச் சகோதரன் என்று அரசன் நம்பும்படி அந்த மயிர்வினைஞனைக்கொண்டு சூழ்ச்சி செய்தனர். அதனால் அடைப்பைக்காரனைத் தன்

னிடத்தில் வைத்துக்கொண்டதே பெரும்பிழையா கும் என்று அரசன் கருதலானன். எனினும், அந்த எண்ணம் நிலைத்திருக்கவில்லை. கம்பருடைய மதிநுட்பத்தாலும் தெய்விகசக்தியினுலும் உண்மை வெளிப்பட்டது. அடைப்பைத்தொழில் செய்து கொண்டிருந்தவர் கம்பரே என்பதைச் சேரன் அறிந்துகொண்டான்.

பிறகு, சேரன், கம்பரை நோக்கி, "பாவலரே! நான் இவ்வளவு காலம் நும்மை இன்னர் என்று அறிந்துகொள்ளாமற் போனேனே; எனது அறியாமையை என்னென்பேன்? அதன்பொருட்டு என்னை மன்னித்தருள்வீராக. மேலும், தாங்கள் தங்களது பெருமைக்குப் பொருந்தாத அடைப் பைத் தொழிலை மேற்கொண்டு எனக்கு வெற்றிலை மடித்துக் கொடுத்தீர்கள். அதற்குப் பதிலாக நானும் சிலகாலம் நும்மிடம் அடைப்பைத்தொழி லைச் செய்ய அனுமதி தரவேண்டும்" என்று வேண் டினன். கம்பர், சேரனை நோக்கி, "மன்னரே! நீர் என்னிடத்தில் வைத்திருக்கும் அன்பிற்கும் மரியாதைக்கும் எல்லையுண்டோ? நீரோ நாடா ளும் மன்னவர்; நானே ஓர் எளிய புலவன்: நீர் எனக்கு எப்படிப்பட்ட ஊழியமும் செய்யலாகாது; என்றாலும், நான் ஒரு காரியத்தின்பொருட்டு உமது வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளுகிறேன்; அதற் குத்தக்க காலம் வரும்; அப்பொழுது தெரிவிப் பேன்" என்றனர்.

இவ்வாறு சிலநாட்கள் சென்றன. சோழ மன்னன் தன் சபையில் கம்பர் இல்லாதிருப்பதைப் பெருங்குறையாக எண்ணினன். கம்பர் சேரமன்னனுடைய சபையிலிருப்பதை அறிந்து, அவரை அழைத்துவருமாறு தக்கவர்களை அங்கே அனுப்பினன். அவர்களும், சேரனிடத்திலும் கம்பரிடத்திலும் சோழனது உள்ளக் கருத்தை உணர்த்தியதோடு அவன் மனம் கம்பரிடத்திற் பெரிதும் ஈடுபட்டிருப்பதையும் தெரிவித்தார்கள். கம்பர் கோபம் தணிந்து சோழனிடம்போக உடன்பட்டுச் சேரனுடன் புறப்பட்டார்; சேரனளித்த விருதுகளுடன் அலங்கார புருஷராகச் சோழனது சபைக்கு வந்தார்.

கம்பர் வருவதைத் தெரிந்துகொண்ட சோழன் எதிர்கொண்டழைத்து வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டான்; அவருக்குச் சிறப்பான பல மரியாதைகளைச் செய்தான். கம்பர் ஆஸனத்திலமர்ந்தவுடனே, முன்னரே செய்துகொண்டிருந்த ஏற்பாட்டின்படி அடைப்பைக்காரனாக வந்திருந்த சேரன் வெற்றிலைச்சுருளைக் கொடுத்தான். அரசன் கொடுக்கத் தாம் வாங்கி உட்கொள்வது, 'அற்பனுக்குப் பெருமை வந்தால் அர்த்தராத்திரியில் குடைபிடிப்பான்' என்பதுபோல ஆகுமென்றெண்ணிக் கம்பநாடர் அதனைப் பலரும் அறிய வாங்கிக் கையில் இடுக்கிக்கொண்டார். சற்று நேரத்தில் சபை கலைந்தது. அனைவரும் தத்தம் மாளிகைக்குச் சென்றனர். சேரனும் கம்பரிடம் விடைபெற்றுச்

சென்றான். கம்பர் உரிய காலத்தில் தாம் கூறிய சபதத்தை நிறைவேற்றிய முறையைச் சோழனுக்கு விளக்கிக் கூறினார். சோழன், 'கற்றோர்க்குச் சென்றவிடமெல்லாம் சிறப்பு' என்பதை உணர்ந் தான்; பிறகு, கம்பரிடம் சிறந்த மரியாதையுள்ளவ னாக நடக்கலானான்.

## 2 மனுச்சோழன்

தமிழ் நாட்டில், காவிரிநதி பாயப்பெற்ற சிறப் பினையுடையது சோழமண்டலம். முற்காலத்தில் சோழமண்டலத்திற்குப் பல தலைநகரங்கள் இருந் தன. அவற்றுள் ஒன்று திருவாரூர் என்னும் திரு நகரம்.

திருவாரூரிலிருந்து ஆட்சிபுரிந்தவர்களுள் மனுச் சோழன் ஒருவன். அவன் 'மனுநீதி கண்ட சோழன்' என்றும் அழைக்கப்படுவான். அவன், தன்கீழ் வாழும் குடிமக்களுக்குக் கண்ணும் உயிரும்போன்ற வன்; சிவபக்தியிற் சிறந்தவன்.

மனுச்சோழன் செங்கோல் செலுத்திவரும் நாளிலே, அவன் செய்த தவத்தின்பயனாக, அவ னுக்கு ஒரு புதல்வன் தோன்றினான். அவன், பல கலைகளையும் கசடறக் கற்று வல்லவனானான்; கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்து இளவரசனாவதற்குத் தக்கபருவத்தை அடைந்தான்.

இந்நிலையில், ஒருநாள் அவன் அரண்மனையி னின்றும் புறப்பட்டுச் சேனைகள் சூழத் தேரேறி

வீதியிற் சென்றான். அக்காலத்தில் ஒரு பசுவின் கன்று ஒருவரும் அறியாவண்ணம் துள்ளிப்போய் அரசிளங்குமரன் ஏறிவரும் தேர்க்காலின் அடியில் அகப்பட்டு இறந்தது. அதைக் கண்ட தாய்ப்பசு ஓடிவந்து அலறிச் சோர்ந்து விழுந்தது. கன்றை இழந்து அலறும் தாய்ப்பசுவைக் கண்ட ராஜகுமாரன் மனம் தடுமாறி அறிவு இழந்து தேரிலிருந்து கீழே விழுந்தான்; 'நான் பிறந்தது என் தந்தை யாருக்கு இப்பழி வருவதற்கோ! என்னை அறியாமல் உண்டான இந்தப் பாவத்திற்குப் பிராயச்சித்தம் உண்டாயின் என்னுடைய தந்தையார் அறிந்து கொள்ளு முன்னமே செய்துகொள்வேன்' என்று எண்ணிக்கொண்டு கருமநூல் உணர்ந்த அந்தணரிடம் சென்றான்.

தாய்ப்பசு, கன்றை இழந்த துக்கத்தைச் சகிக்க மாட்டாமல் பெருமூச்சுவிட்டுக் கண்களில் நீர்பெருக அரண்மனையின் ஆசாரவாசலை அடைந்து, அங்கே தொங்கவிட்டுள்ள ஆராய்ச்சிமணியைத் தன் கொம்பால் ஆட்டி அடித்தது. அந்த மணிஓசையைக் கேட்ட மனுச்சோழன் அதிகப் பரபரப்புடன் சிங்காதனத்தினின்று இறங்கி, மிகவிரைந்து சென்று வாயிலை அடைந்தான். அங்குள்ள காவலாளர்கள், வணங்கி, "அரசே! ஒரு பசு இங்கே வந்து தன் கொம்பினால் ஆராய்ச்சிமணியை அடித்தது" என்று சொன்னார்கள். மனுச்சோழன், வருந்துகின்ற பசுவைப் பார்த்து, "இப்பசுவுக்கு நிகழ்ந்த இடையூறு யாது?" என்று மந்திரிகளைக் கோபத்துடன் நோக்கினான்.

நிகழ்ந்த செய்தியை அறிந்த ஒரு மந்திரி, அரசனை வணங்கி, அத் துன்ப நிகழ்ச்சியைத் தெரிவித்தான். அதைக்கேட்ட அரசன், பெரிதும் வருந்தினன்; இரங்கினன்; ஏங்கினன்; "என் செங்கோன்முறை நன்றாயிருக்கின்றது! என்ன செய்தால் இப்பழி நீங்கும்?" என்றான்; கன்றையிழந்த தாய்ப்பசுவின் முகத்தைப் பார்த்துச் சோர்ந்தான்.

அரசனது நிலைமையைக் கண்ட மந்திரிமார், "அரசரே! இவ்வாறு மனம் தளர்வது இதற்குப் பரிகாரமாகாது. பசுக்கொலை செய்தவனுக்குத் தரும நூல்களில் சொல்லியுள்ள பிராயச்சித்தத்தை ராஜ குமாரனைக்கொண்டு செய்வித்தல் வேண்டும்" என்றனர். உடனே, அரசன், "நீங்கள் கூறும் பிராயச்சித்தம் கன்றையிழந்து அலறும் இப்பசுவினது துன்பத்திற்கு மருந்தாகுமா? 'என் ஒரே மகனை நான் இழக்கலாகாது' என்றுகருதி நீங்கள் சொல்லும் இவ் வார்த்தைக்கு இசைந்தேனால் நடுவுநிலைமை தவறி விடாதா? தன் கீழ்வாழும் உயிர்களுக்கு, தன்னாலும் தன்னைச்சார்ந்தவர்களாலும் பகைவராலும் கள்வராலும் பிற உயிர்களாலும் உண்டாகக்கூடிய ஐந்து வகைப் பயங்களையும் நீக்கி, அவைகளைக் காப்பவனல்லனோ அரசனெனப்படுவான்? நான் என் மகன் செய்த கொலைக் குற்றத்துக்குப் பிராயச்சித்தம் செய்ய உடன்படுவேனானால், அயலான் ஒருவன் செய்த கொலைக் குற்றத்துக்கு அவனைக் கொல்லலாகுமா? அஃது, 'ஆதி மனுவினாலே செய்யப்பட்ட நீதிநூன்முறை இந்த மனு என்னும் சோழமன்ன

னல் அழிக்கப்பட்டது' என்னும் பழிமொழியை உலகத்தில் நிலைபெறச் செய்யாதோ?'' என்று மொழிந்தான்.

பிறகும், மந்திரிகள், "அரசரே! அரசிளங்குமாரனைக்கொல்லுதல் முறையாகாது. பிராயச்சித்த முறையைப் பின்பற்றிச் செய்விப்பதே பெரியோர் கைக்கொண்டவழக்கம்'' என்றார்கள். மனுச்சோழன், அவர்கள் கூறியவார்த்தைகளைப் பொருட்படுத்தாமல், "இப்பசுவின் துன்பத்தை நீக்கமுடியாத நான் இப்பசு அடையும் துன்பம் போன்ற துன்பத்தை அடைவதே முறை'' என்றுசொல்லி, எவரும் செய்தற்கரிய செயலைச் செய்யத் துணிந்தான்.

அப்பால், மனுச்சோழன் தன் மகனை அங்கே வரவழைத்தான். ஒரு மந்திரியை அழைத்து, "இவனைப் பசுவின் கன்று உயிர் இழந்த அந்த வீதியிலே தேர்க்காலின்கீழே கிடத்தித் தேரைச் செலுத்து'' என்று கட்டளையிட்டான். அந்த மந்திரி அரசிளங்குமரனைத் தன்னுடன் அழைத்துச் சென்றானாயினும், அரசன் உத்தரவிட்டபடி செய்யாமல் தன்னையே மாய்த்துக்கொண்டான். பின்னர், மனுச்சோழன் தானே தன்மகனை அழைத்துக்கொண்டு போய் அங்கே கிடத்தினான். தன்னுடைய குலத்திற்கு ஒரே மகன் இருக்கிறான் என்பதையும் எண்ணமல் கருமத்தையே பெரிதாக எண்ணி, அவன் மார்பிலே தேருருளை அழுந்தும்படி தேரைச் செலுத்தினான்.

மனுச்சோழன் செய்த இந்தச் செயற்கரிய செயலைக் கண்டு, துக்கம் தாங்கமாட்டாமல், மனிதர்

கள் கண்ணீர்மழை பொழிந்தார்கள். தேவர்கள் பூமழை பொழிந்தார்கள். அப்பொழுது, கடவுளின் திருவருளால் முறையே பசுவின் கன்றும் ராஜகுமாரனும் மந்திரியும் உயிர்பெற்றெழுந்தார்கள். இவற்றைக் கண்ட மனுச்சோழன் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையும் உண்டோ!

மனுச்சோழன் தனது அடிகளில்விழுந்து வணங்கிய மகனைத் தழுவிக்கொண்டான். பசு துன்பம் நீங்கித் தன்னை அணைந்த கன்று உண்ணும் வண்ணம் பாலைச் சுரந்தது.

அனைவரும் மனுச்சோழனது நீதிச் சிறப்பையும் அவனுக்குக் கடவுள் செய்த திருவருளையும் வியந்து மகிழ்ந்தனர்.

## 3. வரிகள்

'குடித்தனமோ துரைத்தனமோ' என்று ஒரு பழமொழி உண்டு. ஒவ்வொரு குடும்பத்திலும், ஆண்களிலும் பெண்களிலும் சிறியோரும் பெரியோருமாகப் பலர் இருப்பார்கள் அல்லவா? ஒவ்வொரு குடும்பத்துக்கும் தலைவன் ஒருவன் இருப்பான். அவனே அக்குடும்பத்தைக் காப்பாற்றும் பொறுப்புள்ளவன். அவன் சொற்படி அந்தக் குடும்பத்தைச் சேர்ந்த யாவரும் ஒழுங்காக நடப்பது நல்லது. அப்பொழுதுதான் அக்குடும்பம் சீர்குலையாமல் சிறந்து விளங்கும்.

குடும்ப நிர்வாகத்தைப்போன்றதே ஒரு நாட்டின் துரைத்தனமும். ஒரு சிறு குடும்பத்தின் தலைவனுக்கே பலவகைப்பட்ட பொறுப்புக்கள் இருக்குமானல், ஓர் இராஜ்யாதிகாரியின் பொறுப்பு இவ்வளவினவென்றும் இத்தனை வகைப்பட்டவை என்றும் சொல்லமுடியுமோ ? அவர், குடிஜனங்களுக்கு எவ்விதமான இன்னல்களும் உண்டாகாமல் கவனித்துவருவதுடன், அவர்களின் உயிர் சொத்து முதலியவற்றுக்கு எப்படிப்பட்ட கேடும் வராமற் பாதுகாத்து வரவும் வேண்டும். இவ்வளவு பொறுப்புள்ள காரியங்களையெல்லாம் ஒருவரே பார்த்துவர முடியுமா ? அதற்காகப் பல அதிகாரிகளை அரசர் நியமித்திருக்கின்றனர்; அவ்வதிகாரிகள் தங்களுக்கிட்ட வேலைகளைப் பட்சபாதமின்றிச் சரிவரச் செய்யப் பல விதிகளையும் வசதிகளையும் ஏற்படுத்தி, அவற்றின்படி நடக்க அவ்வதிகாரிகளுக்கு உத்தரவிட்டிருக்கிருர். இராஜ்ய பரிபாலனம் செய்வது இலேசான காரியமன்று.

சர்க்கார், கட்டாய இலவச ஆரம்பப் படிப்பு, உயர்தரப் படிப்பு முதலியவற்றிற்கு ஏற்ற பலவசதிகள், நியாய விசாரணை, குற்றவிசாரணை, ஊர்க்காவல், தேசக்காவல், போக்குவரவுசாதனங்கள், சுகாதாரங்களைப் பாதுகாத்தல், வியவசாயம் முதலியவைகள் முன்னேற்றமடைவதற்காக ஒவ்வோர் ஆண்டிலும் கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவிடுகிருர்கள்.

இவ்விதம் சர்க்கார் செய்யும் நன்மைகளையெல்

லாம் அடைகிறவர்கள் குடிகளே அல்லவா? குடும்பம் நடைபெற அதன் செலவுக்கு அக்குடும்பத்திலுள்ளவர்கள் வகைசெய்ய வேண்டியவர்கள் ஆவார்கள். அப்படியே, ஓர் இராஜ்யத்தில் பரிபாலன விஷயமாகச் செலவாகும் பணத்திற்கும் அதினின்று பல நன்மைகளை அடையும் தேசமக்களே வகை செய்யவேண்டும்.

கவர்ன்மெண்டையும் மற்றப் பொதுக்காரியங்களையும் நடத்துவதற்காக ஜனங்களிடமிருந்து சர்க்கார் வாங்கும் பணத்திற்கே, 'வரி' என்று பெயர். இவ் வரிப்பணத்தைக் காலத்திற் செலுத்துவது ஜனங்களின் முதற் கடமையாகும். அப்படி வரியைச் செலுத்தத் தவறுகிறவர்களும் மறுக்கிறவர்களும் முறை தவறியவர்கள் ஆவார்கள். வரிகளை வசூல்செய்து அத்தொகையைக்கொண்டே துரைத்தனத்தார் நாட்டின் நன்மையைக் கருதிச் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்கிறார்கள்.

வரிகளில் பலவகைகளுண்டு. அவற்றுள் முக்கியமானது நிலவரியாகும். வருமானவரி, உப்புவரி, கலால்வரி, கடற் சுங்கவரி, ஸ்டாம்புவரி, ரெயில்வே வருமானம், தபால் தந்தி வருமானம் முதலியன மற்றவரிகளாகும். இவற்றுள் சர்க்காருக்குப் பாதி வரும்படி நிலத்திலிருந்தே கிடைக்கிறது.

சில வரிகள் சௌகரியத்தை அனுபவிக்கிறவர்களிடமிருந்து நேராக வாங்கும் வரிகள். நிலவரியும் வரும்படி வரியும் இந்த இனத்தைச் சேர்ந்தவை.

சில வரிகள், பண்டங்களை வாங்கி உபயோகிப்பவர்களின் கைகளில் அவை போய்ச்சேருவதற்குமுன்னதாகவே அவைகளின்மேல்விதித்து வசூலிக்கப்படுவன. இந்த வரியைக் கொடுக்கிற வியாபாரி, இதனால் கஷ்டப்படுகிறதில்லை. இதனை அந்த வியாபாரி சாமான் வாங்குகிறவர்களிடமிருந்து வசூல் செய்கிறான்.

வரிகள் போடுவதில் சர்க்கார் கவனிக்கவேண்டிய சில நல்ல விதிகள் உள்ளன.(ஒருவனுக்கு விதிக்கப்படும் வரி அவன் ஆஸ்திக்குத் தகுந்தவாறும் அவன் அடையும் சௌகரியத்திற்குத் தகுந்தவாறும் இருக்கவேண்டும். எந்த விதமான வரியும் பட்சபாதமில்லாமலும் நியாயமாயும் ஒரே நிலையாயும் விதிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு வரியும் கொடுப்பவன் சௌகரியமாகக் கொடுக்கக்கூடிய காலத்திலும் சிரமமில்லாமல் கொடுக்கக்கூடிய வழியிலும் வசூல் செய்யப்பட வேண்டும்.)

எந்த ஜனங்களிடமிருந்து வரிவாங்கப்படுகிறதோ அந்த ஜனங்களின் சௌகரியத்துக்காகவே அந்த வரிப்பணம் முழுதும் செலவு செய்யப்பட வேண்டும். குடிகள் கொடுக்கவேண்டிய வரிகளை அவர்களைக் கலந்துகொண்டே துரைத்தனத்தார் விதித்தல் நல்லது. வரிகொடுப்பவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் சேர்ந்து எவ்வளவு வரி கொடுக்கவேண்டும் என்பதை நிர்ணயிக்கலாம்.

அறிவுடையவர்கள், பணத்தைக் கண்டபடி பல வழிகளில் செலவு செய்து பிறகு கஷ்டப்படாமலிருப்

பதற்காக ஆலோசித்து, கைப்பணத்திற்குத் தகுந்தவாறு, சரியான வழிகளிற் செலவு செய்கிறார்களன்றோ! அதே விதமே சர்க்காரும் வரவுக்கேற்றபடி மட்டுப்படுத்திச் செலவு செய்கிறார்கள். இதற்காக, சர்க்கார் முன்னதாகவே ஒரு வருஷத்தில் வசூலாகும் பலவித வருமானங்கள், அவ்வருஷத்தில் செலவாகக்கூடிய பல செலவினங்கள் ஆகிய இவற்றைக் கண்டு ஒரு கணக்குத் தயார் செய்கிறார்கள். இதற்கு, வரவு செலவு திட்டம் (=பட்ஜெட்) என்று பெயர். அதன்படியே எல்லாச் செலவுகளும் நடக்கும்.

## 4. மாமனாக வந்து வழக்குரைத்தது

பாண்டிவளநாட்டின் தலைநகராகிய மதுரையம்பதியிலே சிவபெருமான் சோமசுந்தரராகிச் செய்த திருவிளையாடல்கள் அறுபத்துநான்கு. அவற்றுள், 'மாமனாக வந்து வழக்குரைத்தது' என்பது ஒன்று.

மதுரையிலே தனபதியென்னும் பெயரினையுடைய ஒரு வணிகனிருந்தான். அவனுடைய மனைவியின் பெயர் சுசீலை. அவர்களுக்கு மகப்பேறு இல்லாது போயிற்று. தனபதிக்கு இளைய சகோதரி ஒருத்தி இருந்தாள். அவளுக்கு ஒரு மகன் இருந்தான். தனபதி தன் சகோதரியின் புதல்வனையே தனக்கும் மகனாகக்கொண்டு வாழ்ந்துவந்தான்; எனினும், தன் மனைவிக்கும் தங்கைக்கும் மனவேறுபாடு உண்டாகி அடிக்கடி பூசல் நிகழவே, தன் மனைவி மேல் வைத்த ஆசையினால் தங்கையோடு சண்டையிடுவானாயினன். அதனால் கோபங்கொண்ட இளைய

வள், தமையனை நோக்கி, "அண்ணா! பெருமிதம் உனக்கு ஏன்? நீ பிள்ளைப்பேறு அற்ற பாவி. என்னுடைய அருமை மகனலன்றோ உனக்கு இருமைப்பயனும் கிடைக்கவேண்டும்?" என்றாள். தனபதி, பெரிதும் வெட்கமுற்றவனானன்; 'அடுத்த பிறப்பிலாயினும் நல்ல மகனைப் பெறக்கூடிய தவத்தைச் செய்வேன்' என எண்ணித் தன்னுடைய செல்வமனைத்தையும் மருமகனுக்குச் சொந்தமாக்கித் தனது மனைவியோடு தவஞ்செய்ய வனத்துக்குச் சென்றான். அவன் திரும்பிவரவே இல்லை.

தனபதி இல்லாமையால், அவனுடைய சகோதரியும் மருமகனும் ஆதரிப்பாரற்றவராயினர். தனபதியின் தாயாதியர்கள், அவன் மருமகனுக்குக் கொடுத்த வீடு, விளைநிலம், ஆபரணம், திரவியம், பசுக்கள் முதலிய எல்லாவற்றையும் அழிவழக்குப் பேசிக் கவர்ந்துகொண்டார்கள். அதனால், தனபதியின் தங்கை, மனம் வருந்தித் தனது மகனுடன் சோமசுந்தரக்கடவுளின் ஆலயத்திற்குச் சென்றாள்; துன்புற்றவர்களுக்குத் துணையாகக்கூடிய கடவுளே தங்களுக்குப் புகலிடம் என்று எண்ணி, "மதுரையில் எழுந்தருளியுள்ள பெருமானே! எல்லாருக்கும் தந்தையும் தாயுமாகிய நீரே எங்களுக்கும் தந்தையும் தாயும் ஆவீர்; என்னுடைய தமையன், தனக்கு மைந்தனில்லாமையால், என் மகனையே தன் மகனாகக்கொண்டு அவனுக்கு உரிமையாகக் கொடுத்த செல்வமெல்லாவற்றையும் தாயத்தார்கள் வன்மையாற் கவர்ந்துகொண்டார்கள்; நான் ஒருத்தி;

எனக்கு இந்த ஒரு மகனே உள்ளவன்; இவனும் அறிவில்லாச் சிறுவன்; எங்களுக்குத் துணையா வாரும் இல்லை; எங்கும் இருக்கின்ற தேவரீர் இதனை அறியமாட்டீரோ?" என்று கூறிக் கதறினாள்; பூமியில் விழுந்து மூர்ச்சையுற்றுக் கடவுளின் திருவருளால் சிறிது கண்ணயர்ந்தாள்.

அப்பொழுது, சிவபெருமான், அவளுடைய கனவிலே தோன்றி, "நங்காய்! நீ பொழுது விடிந்தவுடன் அரசன்மேல் ஆணையிட்டுத் தாயத்தார்களைத் தரும சபைக்கு வரவழைத்து நிறுத்திவை; நாமே வந்து உங்களது வழக்கைத் தீர்த்துத் தருவோம்; போ" என்று கூறினார். உடனே, தனபதியின் தங்கை, கண்விழித்தெழுந்து, "யாருமில்லார்க்குத் தெய்வமே துணையென்பதறிந்தேன்" என்று மகிழ்ந்தாள்; தாயத்தார்களின் வீட்டுக்குச் சென்று எல்லாரும் கேட்கும்படி அவர்களைப் பார்த்து, "நீங்கள் சமையலுக்கு நெருப்பு மூட்டலாகாது; பொய்வழக்கால் என்னை ஏமாற்றிப் பொருள்களைக் கவர்ந்து கொள்ளும்படி நான் விடமாட்டேன். அரசன்மேல் ஆணை; தருமசபைக்கு வந்து அங்குள்ள பெரியோர்கள் செய்யும் தீர்ப்பைக் கேட்டு, எங்களுடைய பொருள்களைக் கொடுத்துவிட்டுச் செல்லுங்கள்" என்று சொல்லித் தடுத்தாள். தாயத்தார்கள் இவர்களை வைது தள்ளி அடித்தார்கள். அவள், "முறையோ! முறையோ!!" எனக் கதறிக்கொண்டு, மகனுடன் தருமசபைக்குச் சென்று, தனது வழக்கை விரித்துக் கூறினாள். சபையோர் ஏவ

லாளர்களை அனுப்பித் தாயாதியர்களைச் சபைக்கு வருவித்தனர்.

இந்நிலையில், சோமசுந்தரர் தனபதியின் உருவத்துடன் தருமசபைக்கு வந்தார்; "இங்கே அரசன் இல்லையோ? பெரியோர்கள் இல்லையோ? அரசனுடைய செங்கோல் கொடுங்கோலாயிற்றோ? தெய்வமும் இல்லையோ? தருமமும் மறைந்து போயிற்றோ?" என்று கூவினர்; வெற்றுடம் போடிருந்த மருமகனையும் தங்கையையும் தழுவிக் கொண்டு கதறினர்; "குழந்தையின் ஆபரணங்களையுங் கவர்ந்துகொள்ளலாமா?" என்று அலறினர்; "நாம் தருமசபையாரிடம் நமது வழக்கைத் தெரிவித்துள்ளோம். நமது வழக்கு நியாயமானதாதலின், தாயத்தார்களின் அழிவழக்குத் தோற்றுவிடும்; அஞ்சாதீர்கள்" என்று அவர்களுக்கு ஆறுதல் கூறினர், "மாணிக்கம் விற்ற எமது குலத்தலைவரே! எங்களுடைய வழக்கை இச்சபையாரைக் கொண்டு தீர்த்துக்கொடுப்பீராக" என்று ஆலயம் இருக்கும் திக்கை நோக்கிக் கைகூப்பித் தொழுது வேண்டினர்; தருமசபையாரைப் பார்த்து, "ஐயன்மீர்! எங்களது வழக்கை நடுவுநிலைமை தவறாது ஆராய்ந்து பார்த்துத் தீர்ப்புச் சொல்லுங்கள்" என்றுங் கூறினர்.

தருமசபையோர் இருபக்கத்தாருடைய வழக்குக்களையுங் கேட்கலாயினர். அக்கால், தங்களுடைய வழக்குப் பொய்யானது என்பதை உணர்ந்த தாயத்தார்கள், "இவர் எங்களுடைய தாயாதியாகிய

தனபதிவணிகர் அல்லர்" என்று கூறினர்கள். கேட்ட மாமனாக வந்த சொக்கநாதர், கைகொட்டிச் சிரித்து, அங்குள்ள ஒவ்வொருவரையும் சுட்டி அவரவர் குடிப்பேர், பட்டம், காணி முதலியவற்றையும், தாய், தந்தை, மாமன், மாமி, உடன்பிறந்தார், மனைவிமார், சுற்றத்தார் முதலியவர்களின் பெயர் குணம் செயல் முதலியவைகளையும் சிறிதும் தவறில்லாமற் கூறித் தாம் தனபதியே என்று அனைவரும் நம்புமாறு செய்தார். தாயத்தார்கள், அரசனுடைய தண்டனைக்குப் பயந்து, "வீட்டினுக்குச் சென்று வருவேன்; குளத்திற்குச் சென்று வருவேன்" என்று பொய் முகாந்தரங்களைக் கூறிக் கொண்டு, காற்றினல் அடிக்கப்பட்டுக் கலைந்து ஓடும் மேகக்கூட்டம்போல வெளியே சென்றார்கள்.

தருமசபையார், தனபதி வணிகருடைய செல்வங்களெல்லாம் அவருடைய சகோதரியின் மகனுக்கே உரியன என்று தீர்ப்புச்செய்ததுடன், அவற்றை அரசாங்க ஏவலாளர்களைக்கொண்டு தனபதியின் மருமகனது வசமாக்கியுங் கொடுத்தார்கள். தனபதி உருவத்துடன் வந்த சொக்கநாதர், எல்லாருங்காண மறைந்தார்.

இச்செய்தி, அக்காலத்தில் மதுரையிலிருந்து பாண்டிநாட்டை அரசுபுரிந்துவந்த சுந்தரேச பாதசேகரன் என்னும் பாண்டியனுக்குத் தெரிந்தது. அவன் சோமசுந்தரக்கடவுளின் திருவருளை நினைந்து மகிழ்ந்தான். ஆலயத்தைப் பொன்னாலே

புதுப்பித்தான். தனபதியின் மருமகனுக்குப் பல வரிசைகளை வழங்கி, அவனைக் கொண்டாடினான்.

" அகதிக்குத் தெய்வமே துணை "

## 5. நன்றியறிதல்

### (கிளியும் மரமும்)

காசி தேசத்திலுள்ள ஒரு வேடச்சேரியிலே ஒரு வேடன் இருந்தான். அவன் தன் குலத் தொழிலாகிய வேட்டையாடுதலைச் செய்து பிழைப்பவன். ஒரு நாள், அவன் மான் வேட்டையாடக் கருதி நஞ்சுதோய்ந்த அம்புடன் சேரியிலிருந்து புறப்பட்டுச் சென்று ஒரு பெரிய காட்டை அடைந்தான்; அங்கே மான்கள் கூட்டமாய் அருகிலிருப்பதைக் கண்டு அவற்றை அடிக்க விரும்பி அம்பை ஏவினான். அவன் ஏவிய அம்பு தடுக்க முடியாத வலிமை வாய்ந்ததானாலும் குறி தவறிப்போனதால், அது அங்கே வானுற ஓங்கி வளர்ந்து செழிப்புற்றிருந்த ஒரு பெரிய மரத்தின் மேலே தைத்தது. கொடிய விஷம் படிந்த பாணத்தினால் மிக்க வேகமாகக் குத்தப்பட்ட அந்த மரம், உடனே காய்களும் இலைகளும் உதிர்ந்து உலர்ந்துபோயிற்று.

இவ்வாறு அந்த மரம் அழகு அழிந்து போன போது, அதன் பொந்துகளிலே நீண்டகாலமாக வசித்துவந்த ஒரு கிளி, அந்த மரத்தினிடம் வைத்த அன்பின் மிகுதியால், தன் இருப்பிடத்தை விட்டு நீங்கவில்லை. நன்றியறிதலும் தரும சிந்தனையு

முள்ள அந்தக் கிளி, வெளியே பறந்து செல்லாமலும் இரை எடாமலும் இருந்ததனால் சோர்ந்தும் குரல் தழுதழுத்தும், அந்த மரத்தோடு கூடவே உலர்ந்தது.

அஃறிணைப் பொருள்களுள் ஒன்றாகிய அந்தக் கிளியின் செயலைத் தேவராஜன் அறிந்து, "என்ன! இந்தக் கிளி, மனிதர்க்கு மேற்பட்ட நல்லொழுக்கமுள்ளதாயிருக்கிறதே! இதன் நற்குணமும் நல்நடையும் பெரிதும் புகழத்தக்கவை. இந்த மரம் இன்புற்றிருந்த காலத்துத் தானும் இன்புற்று, இது துன்புறுங் காலத்துத் தானும் துன்புறுகின்றதே! தன் ஜாதிகளிடம் பொருந்துதற்கரிய அருளை இது பெற்றிருக்கிறதே" என்று எண்ணித் திகைப்பும் வியப்பும் அடைந்தான். பிறகு, அவன், "இதில் வியப்புக்கு இடமில்லை. எல்லாப் பிராணிகளிடத்திலும் குணங்களும் குற்றங்களுமாகிய எல்லாம் காணப்படுகின்றன" என்று எண்ணினன்.

இவ்வாறு எண்ணிய இந்திரன், ஒரு வேதியன் வடிவங்கொண்டு பூமியில் இறங்கி, அந்தப் பறவையை நோக்கி, "கிளியே! பறவைகளுள் நீ சிறப்புற்றிருக்கிறாய். உன் அன்னை நல்ல தவஞ் செய்தவளென்பது உன்னைப் பார்ப்பதனால் நன்கு விளங்குகிறது. நீ ஏன் இந்த மரத்தை விட்டு நீங்காமல் இருக்கிறாய்?" என்று வினவினன்.

இப்படி இந்திரன் வினவியபோது, அக்கிளி, அவனை வணங்கி, "தேவர் கோவே! உம் வரவு நல்வரவாகுக; நான் என் தவப்பயனால் உம்மை

அறிந்துகொண்டேன்'' என்று சொல்லிற்று. பின்பு, இந்திரன், ''சரி; சரி'' என்று கூறி, 'என்ன மேன்மையான அறிவு!' என்று தன்னுள்ளே கொண்டாடினன். பிறகு, அரிய செயலை மேற்கொண்டிருக்கிற அந்தக் கிளியைப் பார்த்து, தான் கேட்பது பாவமென்பதை அறிந்திருந்தும், அவன் கேட்கலுற்றான்:— ''கிளிப்பிள்ளாய்! இலைகளும் கனிகளும் இன்றி உலர்ந்து, பறவைகளுக்கு ஆதரவற்றிருக்கிற இந்த மரத்தை ஏன் காத்துக்கொண்டு கிடக்கிறாய்? இவ்விடம் பெருங்காடாயிருக்கிறதே! இலைகளால் மூடப்பட்டுள்ள பொந்துகளும் சஞ்சரிப்பதற்குப் போதுமான இடமுமுள்ள பல அழகான மரங்கள் இந்தப் பெரிய அரணியத்தில் இருக்கின்றனவல்லவா? அவற்றினிடம் சென்று வசிப்பது அதிக இன்பந்தருவதாகுமே? நாளானதும் வலிமை குன்றியதும் சுவையற்றதும் பொலிவில்லாததுமாகிய இந்த மரத்தை விட்டு நீங்கு. நான் கூறியவற்றை உன் அறிவால் ஆராய்ந்து பார்'' என்றனன்.

இங்ஙனம் இந்திரன் இயம்பியவற்றைக் கேட்ட அந்தக் கிளி, பெருமூச்சுவிட்டு, துயரத்துடன், ''தேவாதிபரே! எவரும் வெல்லமுடியாத இமையவர் உலகத்திலிருக்கும் நீர் நான் சொல்லுகின்றவைகளைத் தெரிந்துகொள்ள வேண்டும். பலவகைப்பட்ட நற்குணங்களுக்கும் இடமாகிய இந்த மரத்திலே நான் பிறந்தேன்; இளம்பருவத்தில் செவ்வையாகப் பாதுகாக்கப்பட்டேன்; பகைவர்களால் துன்

புறுத்தப்படாமல் இருந்தேன். நான் இந்த மரத்திற்கு ஏதும் உதவிசெய்யவில்லை. எனக்கு இது நல்ல காலத்தில் உதவி செய்திருக்கிறது. எந்தப் பயனையும் கருதாமல் எனக்கு உதவி செய்துள்ள இந்த மரத்திற்கு நான் என்ன கைம்மாறு செய்ய முடியும்? இதனிடத்தில் எனக்கு அன்பும் அருளும் தோன்றி மிகுகின்றன. அவற்ருலேயே நான் வேற்றிடம் செல்ல விரும்பவில்லை. இந்நிலையிலிருக்கும் என்னிடம் நீர் அருள்புரிய வேண்டும். என் பிறவி பயனற்றதாகும்படியானவற்றைச் சொல்லி, தருமத்தில் ஊன்றியுள்ள என் மன உறுதியைக் குலைக்காதீர். நான் தீவினைகளைச் செய்ய எண்ணவுமாட்டேன். நன்றி புரிந்தவரிடம் தயை செய்வதுதானே தருமத்திற்குச் சிறந்த இலக்கணம்? தயைசெய்வதே நல்லவர்களுக்கு எப்போதும் மனமகிழ்ச்சியைக் கொடுக்கிறது. தேவர்கள் எல்லாரும் அறத்திலுள்ள ஐயங்களை உம்மிடத்திலேயே கேட்கின்றனர். அதனுலேயே நீர் தேவரிற் சிறந்தோர்க்கும் அதிபதியாகப் பட்டாபிஷேகம் செய்யப் பெற்றிருக்கிறீர். பல நாளாக இருந்த இம்மரத்தை நான் விடும்படி நீர் சொல்லலாகாது. நன்னிலையிலிருந்த பொருளை அண்டிப் பிழைத்தவன், அது கெட்ட நிலையையுற்றபோது அதனைவிடலாமா? எனக்கு ஆதாரமாயிருந்த இதனை விட்டு நான் நீங்கேன். இந்த மரம் எனக்குச் செய்திருக்கும் உதவிகளை ஒருநாளும் நான் மறவாதிருக்க நீர் அருள் புரியவேண்டும்" என்றது.

அந்தக் கிளியின் சிறந்த கருத்துக்களமைந்த அழகான சொற்களைக்கேட்டு மிகுந்த உவகை அடைந்த இந்திரன், "அறிவு மிக்க கிளியே! ஒரு வரம் கேட்டுக்கொள்" என்ன, பிறர் துன்பமுறு திருத்தலையே தனக்குப் பேரின்பமாக எப்போதும் எண்ணிக்கொண்டிருக்கும் அக்கிளி, அம்மரம் முன் போலச் செழித்தோங்க வேண்டுமென்பதையே வரமாக வேண்டிற்று. அந்தக் கிளியினுடைய உறுதிமிக்க அருளையும் அன்பையும் அறிந்து ஆனந்தம் அடைந்த இந்திரன், அப்போதே அம் மரத்தின்மேல் அமுதமழையைப் பொழிந்தான். அதனல், அந்த மரம், இலைகளும் அழகான கிளைக ளும் பழங்களும் நிரம்பப் பெற்று விளங்கலாயிற்று. அதனைக் கண்ணுற்ற அக்கிளி, அளவில்லாத இன் பம் அடைந்து அந்தமரத்திலேயே வாழ்ந்துகொண் டிருந்தது.

## 6. தேர்தலுரிமையும் முறையும்

அரசாங்கம் ஜனங்களுடைய நன்மைக்காக ஜனங்களிடமிருந்து வசூலிக்கப்பட்ட வரிப்பணத் தைக்கொண்டே நடைபெறுகின்றது. ஆகலால், வரிகொடுப்போராகிய ஜனங்களுடைய அபிப்பி ராயத்தையும் சம்மதத்தையும் அரசாங்கத்தார் அறிந்து அரசியலை நடத்துவது அவசியமென்று ஜனங்கள் வற்புறுத்தினர்கள். வற்புறுத்தவே, தங்கள் அபிப்பிராயங்களை அரசியலை நடத்து வோருக்கு உரிய காலங்களில் தெரிவித்து உதவி

செய்யப் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் உரிமையை அரசாங்கத்தார் ஜனங்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். பிரிட்டிஷ் ஜனங்கள் இவ்வுரிமையை அடைய அரசாங்கத்தாருடன் பல நூற்றாண்டுகள் சச்சரவு செய்யவேண்டியிருந்தது.

(ஒரு நாட்டின் ஆட்சிக்குத் துணைசெய்யும் பொருட்டுத் தக்கவர்களைத் தேர்ந்தெடுக்குமாறு அந்த நாட்டு மக்களுக்கு அரசாங்கத்தாரால் அளிக்கப்பட்ட ஒரு சுதந்திரமே தேர்தலுரிமை எனப்படுவது.) இது 'வோட்' என்று ஆங்கிலத்தில் சொல்லப்படுகிறது. இதனை 'வாக்கு' என்றும் கூறுவர். தேர்தலுரிமையைப் பெறும் தகுதியுடையவர் எவர் என்பதையும் அவர் அந்த உரிமையை எப்படி உபயோகிக்கவேண்டும் என்பதையும் ஒவ்வொருவரும் தெரிந்துகொள்ள வேண்டும்.

தேர்தல் முறை நமது நாட்டிற்குப் புதியதன்று. பண்டைக்காலத்திலே தமிழ் நாட்டில் 'குடவோலை' என்ற ஒரு முறை வழங்கி வந்தது. இன்றைக்கும் கிராமங்களில் 'சேர்க்கி' என்றும் 'நாட்டாண்மை' என்றும் வழங்கிவருவதைக் காணலாம். இவையெல்லாம் பொதுக்காரியங்களைக் கவனிக்கத் தோன்றிய தேர்தல் முறைகளே. ஸ்ரீ இராமபிரானுக்கு முடிசூட்ட விரும்பிய தசரதசக்கரவர்த்தியும், தருமபுத்திரருக்குப் பட்டங்கட்ட விரும்பிய திருதராஷ்டிரனும் அமைச்சர் முதலியோர்களின் சம்மதத்தைக் கேட்டதாக முறையே இராமாயண பாரதங்களிலே படிக்கிறோம்.

முற்காலங்களில், ஜனங்கள் தங்களுக்கு யார் பிரதிநிதியாக இருக்கவேண்டும் என்பதை வெளிப்படையாகச் சொல்லி இத்தேர்தல் நடந்து வந்தது. இக்காலத்திலும், சில கூட்டங்களிலும் சபைகளிலும் ஒருவர் ஒரு கனவானுடைய பெயரைக் கூற, மற்றொருவர் அதனை ஆமோதிக்க, சபையோர் எல்லாருமே ஒருமனமாகவோ அல்லது பெரும் பான்மையினர் சேர்ந்தோ தேர்ந்தெடுப்பது நடந்து வருகிறது. அப்படி வெளிப்படையாக வாக்குக் கொடுப்பதால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள், தாங் கள் ஜனங்களை எவ்வளவு மட்டிலும் நம்பலாம் என் பதையும், தம்மிடம் ஜனங்களுக்கு எவ்வளவு நம்பிக் கையிருக்கிற தென்பதையும் நிச்சயமாகத் தெரிந்து கொள்ளமுடியும்.

இப்படி வெளிப்படையாக வாக்குக் கொடுப்ப தில் சில கஷ்டங்கள் இருக்கின்றன என்பதை உணர்ந்து, இங்கிலாந்தில் சிலர் வெளிப்படையான. வோட் கூடாதென்றும் இரகசியமாகவே வோட் டுக்கள் கொடுக்கப்படவேண்டுமென்றும் அநே கந் தடவைகள் விவாதித்து, அதற்காக ஒரு சட்டம் அமைக்க முயன்று வந்தார்கள். இங்கிலாந்தில் கி. பி. 1830ஆம் ஆண்டிலிருந்து நாற்பது வருஷங் கள் இவ்விவாதம் நடந்தது. மிராசுதாருக்குக் குடி யானவனும், குடியானவனுக்கு அவனிடமிருக்கும் கூலியாட்களும், கம்பெனி அல்லது கடைகளின் முதலாளிகளுக்கு அவர்களிடம் வேலையிலிருக்கும் ஆட்களும் கட்டுப்பட்டிருப்பதை எடுத்துக்காட்டி

அவர்களெல்லாரும் தங்கள் வோட்டைத் தம் மனம் போல் கொடுக்க முடியாதென்பதைச் சில தேர்தல் களில் நிரூபித்தார்கள். கி. பி. 1870 ஆம் ஆண்டில் நடந்த பார்லிமெண்டு தேர்தலில் முன்சொன்ன அசௌகரியங்களெல்லாம் உண்மையென அர சாங்கத்தார் கண்டறிந்தார்கள். சிலர் ஏராளமாகப் பணத்தைச் செலவுசெய்து வோட்டுக்களை விலைக்கு வாங்கினதும் ருஜூப்படுத்தப்பட்டது. அத்தேர் தலில், நற்குணமும் நல்லுணர்ச்சியும் மனச்சாட்சியு முள்ள அனேக ஜனங்கள் வோட் கொடுக்கும் உரி மையை ஓர் உபத்திரவமாக எண்ணினார்கள். ஆகை யால், ஜனங்கள் தம் இஷ்டம்போல் வாக்கைக் கொடுத்துச் சரியான பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுப் பதற்கும், சச்சரவுகள் இல்லாமலிருப்பதற்கும், தேர் தல்களில் இரகசிய வோட் முறை அவசியமென் றுணர்ந்து, கி. பி. 1872 ஆம் ஆண்டில் "இரகசிய வோட்" (Vote by Ballot) என்னும் முறை அனுஷ் டானத்துக்கு வரச் சட்டஞ்செய்யப்பட்டது. இங்கி யாவில் தற்காலத்தில் நடக்கும் தேர்தல்களிலெல் லாம் பெரும்பாலும் இரகசியவோட்டைக்கொண்டே பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கிறார்கள்.

இக்காலத்தில் உலகில் நடைபெறும் அரசியல் களெல்லாம் பெரும்பாலும் ஜனநாயக முறையை அனுசரித்தே நடைபெறுகின்றன. ஜனங்களால் ஜனங்கள் ஆளப்படுவது ஜனநாயகம். இது, காரி யத்தில் கைகூடத் துணைசெய்யவே தேர்தல் முறை தோன்றியுள்ளது.

ஒரு நாட்டின் ஆட்சிக்கு எவ்வளவு மனிதர்கள் முன்னின்று உதவவேண்டுமோ அவ்வளவு மனிதர்களையும், பொதுஜனங்கள் தங்களுடைய பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்து, அவர்களின் உதவியால் ஆட்சி நடத்தச்செய்வது ஜனங்களை ஜனங்கள் ஆளுவதாகவே கருதப்படும். எப்படியெனில், (தேர்தலுக்கு அபேக்ஷகராயிருப்பவர், தாம் தேர்ந்தெடுக்கப்பட்டால், பொது நன்மைக்காகத் தாம் செய்யக் கருதியுள்ள காரியங்களை முன்னதாகவே தெரிவிப்பர்; தமது கருத்தை நிறைவேற்றக்கூடிய சக்திவாய்ந்தவராயுமிருப்பர்; பொது ஜனங்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவராயுமிருப்பர்; எனவே, ஒரு நாட்டின் ஆட்சித்துறையில், இம்முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர் பெரும்பான்மையாக இருப்பார்களாயின், அந்த ஆட்சி எல்லா வழிகளிலும் ஜனங்களது கருத்தை நிறைவேற்றி வைக்கும் என்பது நிச்சயம்.)

தேர்தல் இனிது நிறைவேறச் சிற்சில உரிமைகள் பொது ஜனங்களுக்கு அரசாங்கத்தாரால் கொடுக்கப்பட்டுள்ளன. தேர்ந்தெடுப்பவர்க்கும், தேர்ந்தெடுக்கப்படுபவர்க்கும் இருக்கவேண்டிய தகுதிகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. பெரும்பாலும் தேர்ந்தெடுப்பவர் தேர்ந்தெடுக்கப்படுபவர் ஆகிய இருவகையினர்க்கும் தகுதி ஒரே தன்மை வாய்ந்தது.

ஆட்சிமுறை நடைபெறும் எல்லைக்குட்பட்ட ஓரிடத்தில் ஸ்திரவாசியாய் இருப்பவர்களாயும்,

குறைந்த பக்ஷம் மூன்று மாதங்களாவது அவ்விடத்தில் வசித்தவர்களாயும், வயது வந்தவர்களாயும் உள்ள ஜனங்களில், ஆண் பெண் என்ற வேறுபாடின்றி எல்லாரும் தேர்தலுரிமையைப் பெறுபவராவர். ஆனால், அவர்கள் துரைத்தனத்திற்கு நிலவரி, வீட்டுவரி, வருமானவரி, தொழில்வரி முதலிய வரிகளில் ஒன்றையேனும் செலுத்துபவராயிருத்தல் வேண்டும்; அல்லது, நிலம் வீடு முதலியவற்றைக் குத்தகைக்கோ வாடகைக்கோ வாங்கி அனுபவிக்கிறவராயிருத்தல் வேண்டும். பட்டதாரிகளாகவோ, எழுதப்படிக்கத் தெரிந்தவர்களாகவோ இருப்பதும் தேர்தலுரிமையை அடைவதற்குரிய தகுதியை அளிப்பதாகும். இவ்வித உரிமையைப் பெற்றவர்கள் சென்னை இராஜதானியில்மட்டும் சுமார் அறுபதுலட்சம் ஜனங்கள் இருக்கிறார்கள்.

இந்த உரிமையைப்பெற்ற ஒவ்வொருவரும், பொது நன்மைக்காக, மனச்சாட்சிக்கு விரோதமில்லாமல், இதனைப் பயன்படுத்தவேண்டும். இதைக் கடமையென்று கருதாதவர்கள் அதைப்பெறத் தகுதியுள்ளவரல்லர். உரிமைபெற்ற ஒவ்வொருவரும் "வாக்கை"க் கொடுக்கும்பொழுது, தம் ஒரு வாக்கினாலேயே அந்தப் பிரதிநிதி தேர்ந்தெடுக்கப்படுவதாக நினைத்து, அப் பிரதிநிதி பொதுஜன நன்மையைக் கருதிப் பாடுபடுபவரா என்பதைச் சரியாக ஆலோசனைசெய்து, தம் வாக்கை அப்படிப்பட்ட ஒருவருக்குக் கொடுக்கவேண்டும். அந்தத் தேர்தல் தம் ஒருவருடைய அபிப்பிராயத்தை அறி

வதற்காகவே வைக்கப்பட்டதாகவும் அவர் நினைக்க வேண்டும்.

தங்கள் அபிப்பிராயங்களைப் பயமும் பட்சபாதமும் இல்லாமல் சொல்லி, ஜனங்களின் குறைகளை நீக்கிச் சௌகரியங்களை அதிகரிக்கச் செய்யும் சக்தி வாய்ந்தவர்களையே தங்களின் பிரதிநிதிகளாக ஜனங்கள் தேர்ந்தெடுக்கவேண்டும்; "சுயநலத்தைக் கருதி நாட்டின் நலத்தை மறப்பவராக இருத்தல் கூடாது" என்பதை அந்தப் பிரதிநிதிக்கு வற்புறுத்தவும் வேண்டும். வாக்காளர் தாக்ஷிண்யம், பரிதாபம் முதலிய மாயங்களுக்கு உட்படலாகாது.

தேர்தல் நடக்கும்போது, வாக்குரிமை பெற்ற ஒவ்வொருவரும் தேர்தல் நடக்குமிடத்திற்குச் சென்று அவ்விடத்திலிருக்கும் உத்தியோகஸ்தரிடமிருந்து வோட்டிங் காகிதத்தை வாங்கிக்கொள்ள வேண்டும். பின்பு, தனியிடம்போய் அதில் அச்சிடப்பட்டிருக்கும் பிரதிநிதிகளின் பெயர்களுள் தாம் வாக்குக் கொடுக்க முடிவு செய்துகொண்ட பிரதிநிதியின் பெயருக்கு நேரே பெருக்கற்குறி போன்ற ஓர் அடையாளமிட்டு, பின்பு அக்காகிதத்தை மடித்து, அங்குப் பூட்டி அரக்குமுத்திரை இட்டிருக்கும் பெட்டியில் போடவேண்டும். இதுவே இதுவரையில் எல்லாத் தேர்தல்களிலும் கையாளப்பட்டுவந்த முறையாகும். போலிங் ஆபீசர் கொடுக்கும் ஒரு சீட்டை, அந்த அந்தப் பிரதிநிதிக்கென்று முன்னமே குறிப்பிடப்பட்டுள்ள பல வர்ணப்பெட்டிகளுள் ஒன்றில் போடுவது இக்காலம் சென்னை

ராஜாங்க சபைகளின் தேர்தலிலே ஏற்பட்டுள்ள மாறுதலாகும். இவ்விதமான பெட்டிகளில் அச் சீட்டுக்களைப் போடமுடியுமே யொழிய பெட்டியைத் திறக்காமல் அவைகளை வெளியே எடுக்கமுடியாது. பின்பு, இதற்கென்று நியமிக்கப்பட்ட ஓர் உத்தி யோகஸ்தர், அப்பெட்டியைத் திறந்து, யாருக்கு அதிக வாக்குக்கள் கிடைத்திருக்கின்றனவென்ப தை அபேக்ஷகர்கள் அல்லது அவர்களுடைய பிரதி நிதிகளின் முன்னிலையில் எண்ணி அறிந்து, அவரே பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவரென்று வெளியிடுவார்.

## 7. ஆளுக்கேற்ற மதிப்பு

[மஹா மஹோபாத்தியாய, டாக்டர்,
வே. சாமிநாதையரவர்கள் எழுதியது.]

புதுச்சேரியிற் பல வருஷங்களுக்குமுன் ஒரு பிராமணர் இருந்துவந்தார். அவர் மிகவும் வறிய வர். தம்முடைய வைதிக வாழ்க்கைநெறி தவறாமல் அவர் ஒழுகி வந்தார். இறைவனிடத்தில் உறுதி யான அன்புடையவராதலின் வறுமையின் துன்பம் அவர் உள்ளத்தை மெலியச் செய்யவில்லை. பிற ரிடம் சென்றுசென்று யாசகம் செய்து வாழும் துணிவு அவர்பால் இல்லை. ஆயினும், அவருடைய தூய்மையான ஒழுக்கத்தையும் அன்புநிலையையும் அறிந்த சில பிரபுக்கள், அவருக்கு வேண்டியவற் றைக் குறிப்பாக அறிந்து உதவிபுரிந்து வந்தார்கள்.

அதனால், அவ்வந்தணருக்குக் குடும்பக்கவலை உண்டாகவில்லை. அவர்களுள் ஒருவர், அவ்வந்தணரைத் தெய்வம்போல மதித்திருந்தார். அவர், "தாங்கள் எந்தச் சமயத்தில் எதுவேண்டுமாயினும் கேட்கலாம். அப்பொருளைத் தருவதற்கு நான் முன்வருவேன்" என்று சொல்லியிருந்தார். அவ்வந்தணரும் தமக்கு ஏதேனும் வேண்டுமாயின், வேறு யாரிடத்தும் கூறாமல், அச்செல்வரிடத்திலே சென்று சொல்லி வாங்கிக்கொள்வார்.

"இரத்தலும் ஈதலே போலும் கரத்தல்
கனவிலும் தேற்றாதார் மாட்டு"

என்பது பொய்யாமொழியன்றோ?

அந்தணருக்கு ஒரு புதல்வன் இருந்தான். அவனுக்கு உபநயனம் செய்யும் காலம் வந்தது. அது செய்வதாயின் தக்க பொருள் வேண்டும். அந்தணரோ பொருளில்லாதவர். ஆயினும், தமக்குக் கற்பகம்போல் இருக்கின்ற பிரபுவிடம் கூறி உபநயனத்தை நடத்தி முடிக்கலாமென்ற தைரியம் அவருக்கு இருந்தது.

ஒருநாள், இவ்விஷயத்தை அவ்வுபகாரியிடம் சொல்ல எண்ணி வேதியர் புறப்பட்டார்; அப்பிரபுவின் வீட்டுக்கருகே போய்ச்சேர்ந்தனர். அப்பொழுதுதான் அச்செல்வர் தம்முடைய இரட்டைக் குதிரைவண்டியில் ஏறி வெளியிலே புறப்பட்டுக் கொண்டிருந்தார். வண்டி வருவதை அந்தணர் பார்த்தார்; 'இது சரியான சமயமன்று' என்றெண்ணி

வழியைவிட்டு விலகி நின்றார். அவர் நிற்பதைக் கண்ட கனவான், சட்டென்று வண்டியை நிறுத்தச் செய்து அவரைப் பார்த்து, "ஏன் இங்கே நிற்கிறீர்கள்? எங்கே போகவேண்டும்?" என்று கேட்டார். அவர் போகும் இடம் தெரிந்தால் தாமே அவரை அங்கே கொண்டுவிடலாமென்பது அவ்வுபகாரியின் கருத்து. அந்தணர், "தங்களைத் தேடித்தான் வந்தேன்; அப்பால் ஓய்வான காலத்தில் வந்து விஷயத்தைச் சொல்லிக்கொள்ளுகிறேன்" என்றார்.

பிரபு:—அப்பால் என்ன? இப்பொழுதே சொல்லுங்கள். எது வேண்டுமானாலும் செய்யக் காத்திருக்கிறேன்.

அந்தணர்:—என்னுடைய குமாரனுக்கு உபநயனம் செய்யவேண்டும். அதன்பொருட்டே தங்களைப் பார்த்துப் போகவந்தேன்.

பிரபு:—இதுதானா பெரிது? அதற்கு எவ்வளவு செலவாகும்?

அந்தணர்:—நூறு ரூபாய் செலவாகும்.

பிரபு:—இதோ இந்த வண்டியிலே ஏறுங்கள்; வழியிலேயே வாங்கித் தருகிறேன்.

அந்தணர் பிரபுவோடு வண்டியில் ஏறிக்கொண்டார். வண்டி போய்க்கொண்டிருந்தது.

அந்தணர்:—தாங்கள் எனக்கு அப்போதப்போது செய்துவரும் உபகாரத்திற்கு நான் என்ன கைம்

மாறு செய்யப்போகிறேன்! நூறு ரூபாயைச் சம்பாதிப்பதற்கு என்னால் இயலவில்லை. யாரிடமாவது கடனாக வாங்கலாமென்றாலோ என்னை நம்பி யார் கொடுப்பார்கள்? என்னிடம் என்ன சொத்து இருக்கிறது? என் காதில் இருக்கிற இந்தக் கால்ரூபாய்க் கடுக்கனைத்தவிர, எனக்கு வேறொன்றும் இல்லை. வேறுவழியில்லையென்று துணிந்து உங்களை நாடி வந்தேன்.

பிரபு:—அது கிடக்கட்டும். உங்கள் கடுக்கன் கால்ரூபாயா பெறும்? இப்போது ஒரு வேடிக்கை பாருங்கள். உங்கள் கடுக்கனைக்கொண்டே நூறு ரூபாய் வாங்கித் தருகிறேன்.

பிரபு தம்முடைய காதிலிருந்த வைரக் கடுக்கனைக் கழற்றி வைத்துக்கொண்டார்; பிராமணருடைய கடுக்கனைக் கழற்றிக்தரச்செய்து அவற்றைத் தம் காதில் அணிந்துகொண்டார். பிறகு, வண்டியை நேரே ஒரு காசுக்கடைக்கு ஓட்டச் செய்தார்.

வண்டி காசுக்கடை வாசலில் வந்து நின்றது. பிரபு, அதிலிருந்தபடியே கடைக்காரரை அழைத்துத் தம் காதிலிருந்த பிராமணருடைய கடுக்கனைக் கழற்றிக்கொடுத்து, "இதோ இவற்றை வைத்துக்கொண்டு நூறு ரூபாய் தாரும்" என்றார். கடைக்காரர் பேசாமல் அவற்றை வாங்கிக்கொண்டு நூறு ரூபாய் தந்தார். பிரபு வண்டியைவிடச் செய்தார். வண்டி சிறிதுதூரம் சென்றது.

பிரபு:—பார்த்தீர்களா உலகத்தை? உங்கள் காதிலிருந்த கால்ரூபாய்க் கடுக்கனே நூறு ரூபாயை வாங்கித் தந்தன. இருநூறு கேட்டாலும் அவன் கொடுத்திருப்பான். ஆளுக்கேற்றபடி ஒரு பொருளுக்கு மதிப்பு உண்டாகிறது.

அந்தணர்:—இவ்வளவு அவசரமாகக் கொடுக்க வேண்டியதில்லையே.

பிரபு:—"எதையும் நினைத்தபொழுதே செய்து விடவேண்டும். மனம் எப்போதும் ஒரு நிலையில் இராது. அதனல் இப்படிச் செய்தேன்" என்று சொல்லி, அந்த நூறு ரூபாயையும் அந்தணர் கையிற் கொடுத்தனுப்பினர். சிறிதேனும் மதிப்பற்ற தம் கடுக்கன் நூறுரூபாயைத் தரச்செய்த உலக இயல்பை வியந்துகொண்டே அந்தணர் தம் வீடுசென்றார்.

பிரபு, தாம் செல்லவேண்டிய இடத்திற்குச் சென்று, பார்க்கவேண்டிய காரியத்தை முடித்துக் கொண்டு வீட்டிற்கு வந்தார்; வந்து, நூறுரூபாயைக் காசுக்கடைக்காரருக்கு அனுப்பிவிட்டு அந்தணருடைய கடுக்கனைத் திரும்ப வருவித்தார்; பிறகு, அந்தணரைக் கண்டு, "உங்கள் கடுக்கன் என் காதில் அணிந்து கொண்டன வாதலின் மீண்டும் தாங்கள் அணிவது தக்கதன்று. அன்றியும், நான் கொடுத்த நூறு ரூபாய்க்கு அவை அல்லவா ஈடு? அவற்றை நான் திருப்பித் தரமாட்டேன்" என்று சமத்காரமாகக்கூறிவிட்டு அவற்றிற்குப் பிரதியாக ஒருஜோடிப் புதியகடுக்கனை வருவித்து அவர் காதில் அணிவித்தார்.

மறையவர் அப்பிரபுவின் வண்மை விளையாட்டையும், இவ்வளவையும் செய்விக்கும் இறைவனது அருள் விளையாட்டையும் எண்ணி எண்ணி மன முருகினர்.

## 8. பரம்பரைக் குணம்

[மஹா மஹோபாத்தியாய, டாக்டர்,
வே. சாமிநாதையரவர்கள் எழுதியது]

மிதிலைப்பட்டி என்னும் ஊரை நான் எந்தக் காலத்தும் மறக்கமுடியாது. தமிழ்நாட்டில் எவ்வளவோ புண்ணிய ஸ்தலங்கள் இருக்கின்றன: சிவ ஸ்தலங்களும் விஷ்ணு ஸ்தலங்களும் சுப்பிரமணிய ஸ்தலங்களும் பல உள்ளன. அவற்றைப்போலத் தமிழ்த் தெய்வம் கோயில் கொண்டுள்ள ஸ்தலங்களுள் ஒன்றாகவே மிதிலைப்பட்டியை நான் கருதியிருக்கிறேன். அது சிவகங்கை ஸம்ஸ்தானத்தைச் சார்ந்தது. புதுக்கோட்டையைச் சார்ந்த திருமெய்யம் என்னும் இடத்திலிருந்து சில மைல் தூரத்தில் உள்ளது. அங்கிருந்து நான் பெற்ற ஏட்டுச் சுவடிகள் சில. அவற்றை எனக்கு உதவியவர் அழகியசிற்றம்பலக்கவிராயர் என்னும் ஓர் அன்பர்.

அவருடைய பரம்பரையானது தமிழ் வித்துவான்களுடைய பரம்பரையாதலின், பல அரிய தமிழ்ச் சுவடிகள் பல நூற்றாண்டுகளாகச் சேகரித்து அவர் வீட்டிலே பாதுகாக்கப் பெற்றிருந்

தன. அவருடைய முன்னோர்கள் பல ஸம்ஸ்தானங்களில் யானை முதலிய பரிசுகளும் மானியங்களும் பெற்றவர்கள். அவர் வீட்டின் பக்கத்தில் பழைய காலத்தில் யானை கட்டிய கல்லையும் பழைய சிவிகையையும் பார்த்திருக்கிறேன். அங்கே, கலைமகளும் திருமகளும் ஒருங்கே களிநடம் புரிந்தனர்.

அழகியசிற்றம்பலக்கவிராயர் நல்ல செல்வர். அவரோடு நான் பழகிய காலத்தில் அவருடைய முன்னோர்களைப்பற்றிய பல வரலாறுகளை அவர் எனக்குச் சொல்லியிருக்கிறார். தம்முடைய சொந்த அநுபவங்கள் பலவற்றையும் சொன்னதுண்டு. அவற்றுள் ஒன்று வருமாறு.

ஒருநாள், எங்கேயோ நெடுந்தூரமுள்ள ஒரூருக்கு ஒரு கலியாணத்திற்கு அவர் போயிருந்தார். மீண்டும் ஊருக்குத் திரும்ப எண்ணி ஒரு வண்டிக்காரனிடம் வண்டி பேசி அமர்த்திக்கொண்டார். இரவு முழுவதும் பிரயாணம் செய்யவேண்டியிருந்தது. வண்டிக்காரன் மூன்று ரூபாய் வாடகை கேட்டான்; அன்றியும், "ஊருக்குப் போகையிற் பொழுது விடிந்துவிடுமாகையால், எனக்கு நாளைக் காலையில் சாப்பாடு போட்டு அனுப்பவேண்டும்" என்றும் தெரிவித்துக்கொண்டான். அவ்வாறே செய்விப்பதாக அவர் உடன்பட்டார்.

இராத்திரியில் வண்டி புறப்பட்டது. கவிராயர் அதிற் படுத்துக்கொண்டார். நல்ல நிலா வெளிச்சம் இருந்தது. வண்டிக்காரன் ஆனந்தமாகத் தெம்மாங்கு முதலியவற்றைப் பாடிக்கொண்டே

வண்டியை ஓட்டினான். காளைகள் வேகமாகச் சென்றன. பாட்டுக்களைக் கவிராயர் கேட்டுப் பாராட்டிக்கொண்டே வந்தார். பின்பு, வண்டிக் காரன் மெல்ல அவருடைய குடும்ப நிலையைப் பற்றி விசாரித்தான். அவர் தம்முடைய வரலாற் றைச் சொல்ல ஆரம்பித்தார்:—

"நான் இருப்பது மிதிலைப்பட்டிதான். எங்கள் முன்னோர்களெல்லாம் பெரிய வித்துவான்கள். அவர் கள் எவ்வளவோ நூல்களைச் செய்திருக்கிறார்கள்; பல இடங்களில் பரிசுகள் பெற்றிருக்கிறார்கள். முதலில் அவர்கள் சேலத்தைச் சார்ந்த ஓரூரில் இருந்தனர்; அக்காலத்தில் தாரமங்கலம் கோயில் திருப்பணிகள் செய்த கட்டியப்ப முதலியார் என்ப வரால் ஆதரிக்கப்பெற்று வந்தனர். அவர்களில் ஒருவராகிய அழகியசிற்றம்பலக்கவிராயருக்கு இந்த மிதிலைப்பட்டி என்னும் கிராமமானது அக் காலத்தில் இந்தப் பக்கத்தில் ஜமீன்தாராக இருந்த வெங்களப்பநாயக்கரென்பவரால் கொடுக் கப்பட்டது. அது சம்பந்தமான சாஸனம் எங்கள் வீட்டில் இருக்கிறது. இராமநாதபுரம் சேதுபதிக ளிடமிருந்து பலவகையான பரிசுகளை எங்கள் முன் னோர்கள் பெற்றிருக்கிறார்கள்; மருங்காபுரி ஜமீன் தாரிடமிருந்தும் பலவற்றை அடைந்திருக்கிறார்கள்; சிவகங்கையிலிருந்தும் அப்படியே கௌரவம் பெற் றிருக்கிறார்கள். அந்தக் காலத்தில் தமிழருமை அறிந்த அரசர்களும் ஜமீன்தார்களும் இருந்தார் கள். அவர்கள் வித்துவான்களை ஆதரித்தார்கள்.

அதனால் வித்வான்களும் பிரபுக்களைப்போலவே கவலையில்லாமல் வாழ்ந்து வந்தார்கள். எங்களுக்கு இப்பொழுது ஜீவனாதாரமாக இருப்பதும் எங்கள் குடும்பத்தில் லக்ஷ்மீகடாக்ஷம் குறையாமல் இருக்கும்படி செய்வதும் அந்த வெங்களப்பநாயக்கர் கொடுத்த கிராமமே. அவருடைய அன்னத்தைத்தான் இப்பொழுதும் நாங்கள் சாப்பிட்டு வருகிறோம். என்ன, கேட்கிறாயா?"

"ஆமாம், சொல்லுங்கள்" என்றான் அவன்.

"வெங்களப்பநாயக்கர் செய்த பல தர்மங்களும் அவருடைய புகழும் இன்றும் நிலைத்திருக்கின்றன. அவரால் ஆதரிக்கப்பெற்ற பரம்பரையினராகிய நாங்களும் பிறரும் நல்ல நிலையிலிருக்கிறோம். அவருடைய பரம்பரையோ இருந்த இடம் தெரியாமற் போய்விட்டது. எங்கள் முன்னோர்களைப்போன்ற எவ்வளவோ பேர்களுக்கு அவர் அளவற்ற செல்வத்தைக் கொடுத்திருக்கிறார். அவர் பரம்பரையினர் கொடுத்துக் கொடுத்துப் புகழைச் சம்பாதித்தனர். ஆனாலும், பிற்காலத்தில் அக் குடும்பத்திற் பல பிரிவுகள் உண்டாயின; செல்வமும் குறைந்துவிட்டது. வெங்களப்பநாயக்கருடைய பரம்பரையினர் யாரேனும் இப்போது எங்கேயாவது இருக்கிறார்களோ இல்லையோ தெரியவில்லை. அவர்களுடைய நிலை எப்படி இருக்கின்றதோ! காலசக்கரமானது இப்படி மாறிக்கொண்டே வருகிறது" என்று சொல்லிக்கொண்டே வந்த அவர் அயர்ச்சி மிகுதியால் தூங்கிவிட்டார்.

விடியற்காலையில், வண்டி மிதிலைப்பட்டி வந்து சேர்ந்தது. வீட்டை அடைந்த கவிராயர் காலைக் கடன்களை முடித்துக்கொண்டார். தம்முடைய வேலைக்காரனை அழைத்து வண்டிக்காரனுக்குப் பழையது போடும்படி சொன்னார். அப்பொழுது, வண்டிக்காரன், “எனக்குச் சாப்பாடு வேண்டாம். நான் போய்வருகிறேன். உத்தரவு கொடுங்கள்” என்று சொன்னான். அவர், “நீ ஊர்போய்ச் சேர்வதற்கு அதிக நாழிகையாகுமே. சாப்பிட்டுவிட்டுப் போ” என்று வற்புறுத்தினார்.

வண்டிக்காரன், “இல்லை; இப்பொழுது எனக்குப் பசி இல்லை. போகும் வழியில் தெரிந்தவர்கள் வீட்டில் சாப்பிடுவேன்” என்றான்.

கவிராயர், “சரி; இதோ வாடகை ரூபாயை வாங்கிக்கொண்டுபோ” என்று சொல்லி ரூபாயைக் கொடுக்க ஆரம்பித்தார்.

“ரூபாய் தங்களிடமே இருக்கட்டும். நான்போய் வருகிறேன்” என்று பணிவோடு அவன் சொன்னான்.

கவிராயர் திகைத்துவிட்டார்; அவன் அதிக வாடகை விரும்பக்கூடுமோவென்று எண்ணினார்.

“நான் பேசினது மூன்று ரூபாய்தானே ?” என்று அவர் கேட்டார்.

“இது கிடக்கட்டும் ஐயா ! நான் போய்வருகிறேன். தாங்கள் வேறு ஒன்றும் நினைத்துக்கொள்ளக்கூடாது” என்று கம்பீரமாக வண்டிக்காரன் சொன்னான்.

"ஏனப்பா? இவ்வாறு சொல்வதற்குக்காரணம் ஒன்றும் விளங்கவில்லையே!" என்று இரக்கத்தோடு அவர் கேட்டார்.

"ஐயா! நேற்று இராத்திரி உங்கள் முன்னோர்கள் கதையைச் சொல்லிவந்தீர்களே! அவர்களை ஆதரித்த வெங்களப்பநாயக்கர் பரம்பரையிற் பிறந்தவன் அடியேன். ஏதோ தலைவிதி இப்படி என்னை வண்டியோட்டச் செய்தது. 'என்ன செய்தாலும் கொடுத்ததைமட்டும் வாங்கக்கூடாது' என்று பெரியவர்கள் சொல்வார்கள். எங்கள் மூன்னோர்களால் கொடுக்கப்பட்டவைகளில் ஒரு துரும்பையாவது உங்களிடமிருந்து வாங்கிக்கொள்ள என் மனம் துணியவில்லை. மன்னிக்க வேண்டுகிறேன். இவ்வளவாவது தங்களுக்கு நான் உபயோகப்படும்படி கடவுள் கூட்டிவைத்தது என் பாக்கியந்தான்" என்று சொல்லிவிட்டுக் கவிராயர் மேலே பேசத் தொடங்குவதற்குள் வண்டியை அவன் ஓட்டிக் கொண்டு போய்விட்டான்.

கவிராயருடைய மனம் அவனுடைய கம்பீரத்தையும் வெங்களப்பநாயக்கர் பரம்பரையின் பெருமையையும் அவனுடைய நிலையையும் நினைந்து இரங்கியது. அவர் கண்களில் நீர் ததும்பியது.

இந்த வரலாற்றைப் பிற்காலத்தில் எனக்குக் கூறும்பொழுதுகூட இந்தக் கடைசிச் சந்தர்ப்பத்தைச் சொல்லுகையில் அவர் கண்களில் நீர்த்துளிகள் புறப்பட்டன; நாத் தழுதழுத்தது.

உயர்ந்த பரம்பரையில் பிறந்தவர்களுடைய கம்பீரமும் உதாரகுணமும் எக்காலத்தும் அழியாதவை. "கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே" என்ற அருமையான வாக்கியத்திற்கு இந்த வரலாற்றைவிட வேறு சிறந்த உதாரணம் கிடைக்குமோ?

## 9. தற்புகழ்ச்சியால் வருங்கேடு

### (இலவமரமும் காற்றும்)

மலையரசன் என்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற இமயமலையிலே ஓர் இலவமரம் இருந்தது. அது, பல வருஷங்களாக வளர்ந்து வந்தமையால், பல வேர்களும் கிளைகளும் இலைகளும் பொருந்தியதாய் ஆகாயத்தை அளாவிக்கொண்டிருந்தது. அம்மரத்திலே மலர்களும் கனிகளும் மலிந்திருந்தன. அந்த மரம் நானூறு முழம் சுற்றளவுள்ளதாக இருந்தது. அது நெருங்கிய நிழலுடையதாயிருந்ததால், அந்த மரத்தின் அடியில் வெயிலால் வருந்தி இளைத்த யானைகள் முதலிய விலங்குகளும் இளைப்பாறிக்கொண்டிருந்தன. கிளிகளும் நாகணவாய்ப் பறவைகளும் அதனை அடைந்து, மிக்க களிப்புடன் இன்குரல் எழுப்பி இனிது வசித்தன. பேரழகு வாய்ந்த அந்த மரத்தின் அடியிலே வழிப்போக்கர்களும் வர்த்தகர்களும் தவசிகளும் வசிப்பார்கள். ஒரு சமயம், திரிலோக சஞ்சாரியாகிய நாரதமுனிவர், அம்மரத்தின் அருகிற்சென்று அதனை பார்த்துச் சொல்லலுற்றார் :

"இலவமரமே! நீ உன் ஜாதிகளுள் மிகவும் சிறந்திருக்கிறாய்; காண்பவர் மனத்தைக் கவர்கிறாய். நீ என்னைப்போன்றவர்களையும் மகிழ்விக்கிறாய். பறவைகளும் விலங்குகளும் அதிக சந்தோஷத்துடன் உன்னிடம் வசிக்கின்றன. பெருங்கிளைகளைப் பெற்றுள்ள மரமே! உன் உறுப்புக்களாகிய கவைகளும் கொம்புகளும் காற்றால் முறிக்கப்படாமலிருக்கின்றன. காற்று உன்னிடம் நட்புக்கொண்டுளதோ? காற்று உன்னை வருத்தாமல் காப்பாற்றுவதற்குக் காரணம் யாது? காற்று இணையில்லாத தன் வேகத்தால் பலவகையான மரங்களையும் மலைச்சிகரங்களையும் நிலைகுலையச் செய்துவிடுகிறது. அந்தக் காற்று மடுக்களையும் ஆறுகளையும் குளங்களையும் கடல்களையும் காயச் செய்துவிடுகிறது. அஃது உன்னிடம் நட்புக் கொண்டிருப்பதாலேயோ உன்னைக் காப்பாற்றுகிறது. இதில் ஐயமில்லை. ஆகையால், நீ பல கிளைகளும் இலைகளும் மலர்களும் நிரம்பப்பெற்று விளங்குகிறாய். பல பறவைகள் உன்னிடம் மகிழ்ச்சியுடன் விளையாடிக் கொண்டிருப்பது உனக்கு அதிக அழகைக் கொடுக்கிறது. கூட்டமாய் வசிக்கும் இப்புள்ளினங்களின் இன்குரல்கள் பலவகைப்பட்டனவாய் எழுந்து கேட்போருக்கு இன்பத்தை மிகுவிக்கின்றன. சிங்கங்களும் யானைகளும் தங்கள் தங்கள் இனங்களுடன் உன்னிடம் அடைந்து களிப்படைகின்றன. அந்தணர்களும் முனிவர்களும் துறவிகளும் உன்னை அடுத்து உறைவதால் உன்னிடத்தைத் தேவலோகத்திற்கு ஒப்

பாகக் கருதுகின்றேன். அழகிய இலவமரமே! நீ எப்பொழுதும் காற்றுக்குக் கீழ்ப்படிந்திருப்பதால் அது உன்னைக் காப்பாற்றுகிறது; இதுவே சரியான காரணமென்று தோன்றுகிறது. காற்றின் வன்மையால் கெடுருத மரமோ மலையோ வீடோ எதுவும் இல்லை. நீயோ இக்காரணங்களால் இன்னல் அடையாமல் இருக்கிருய்'' என்ருர்.

இவ்வாறு நாரதமுனிவர் கூறியவற்றைக் கேட்ட இலவமரம், அவரை நோக்கி, "முனிவரே! காற்று என்னைக் காப்பாற்றுகிறதென்று நீர் கருதி, அதற்குக் காரணங்களையும் கண்டறிந்ததாகக் கூறினீர். காற்றுக்கு என்னிடம் நட்புத்தன்மையும் இல்லை; உறவுமுறைமையும் இல்லை; பிரியமுமில்லை. என்னுடைய மிக்க வலிமை, காற்றுக்குப் பயத்தை விளைத்திருக்கிறது. அது என் வலிமையில் பதினெட்டில் ஒருபங்கையும் அடைந்திலது. எல்லாப் பொருள்களையும் நிலைகுலையச்செய்யும் காற்றை நான் என்வலிமையால் எத்தனையோ தடவை பங்கமுறச் செய்திருக்கிறேன். அதனுல், அது என்னிடம் கோபம் அடைந்திருக்கிறது. அதன் கோபத்தைக் குறித்து நான் பயப்படுபவன் அல்லேன்'' என்றது.

அந்த இலவமரம் இப்படிச் சொன்னவைகளைக் கேட்ட நாரதர், அதைப்பார்த்து, "இலவமரமே! நீ தவருன எண்ணங்கொண்டிருக்கிருய். இதில் ஐயமில்லை. காற்றின் வன்மைக்கு இணையான வன்மையுள்ள பிராணி எவ்விடத்திலும் இல்லை.

இந்திரன் எமன் முதலாயினோரும் அதற்கு ஒப்பானவர் அல்லர்; மரமே! நீயோ இணையாவாய்? காற்று, பூமியிலுள்ள எல்லாப் பிராணிகளிடத்திலும் அசைவையும் உயிரையும் உண்டுபண்ணுகிறது; அது நன்றாக இயங்கினால் பிராணிகளும் நன்றாக இயங்கி நன்மை அடையும்; அது தீதாக இயங்கினால் பிராணிகளும் தீதுற்றுத் திகைக்கும். இத்தகைய மேன்மைபெற்ற காற்றை நீ அவமதித்துப் பேசுகிறாய்; இதற்குக் காரணம் அறிவீனத்தைத் தவிர வேறு என்ன? நீ பொய் சொல்லுகிறாய். நான் உன் வார்த்தைகளைக் கேட்டதினால் உன்னிடம் கோபம் அடைந்திருக்கிறேன். அறிவற்ற மரமே! சந்தனம், தேவதாரு, நீர்நொச்சி முதலிய மிக்க வன்மையுள்ள மரங்களும் உன்னைப் போல வாயுவை நிந்திக்கவில்லை. நீ கூறிய நிந்தையான வார்த்தைகளை வாயுவினிடம் நான் நேரில் சொல்ல இதோ போகிறேன்" என்று கூறினார்.

பிறகு, நாரதமுனிவர், இலவமரத்தைவிட்டு நீங்கி வாயுவிடம்போய், "வாயுவே! இமயமலையின் புறத்திலே மிகச் செழிப்புற்றோங்கிய ஓர் இலவமரம் இருக்கிறது. அஃது உன்னைப்பற்றிப் பல நிந்தனையான வார்த்தைகளைக் கூறிற்று. நான் அவைகளை உன்னிடம் உரைப்பது பொருத்தமாயிராது. நீ எல்லாப் பிராணிகளுக்கும் மேலானவனென்றும் முக்கியமானவனென்றும் அறிந்திருக்கிறேன்" என்று சொன்னார்.

முனிவர் சொன்னவற்றைக் கேட்ட வாயுவுக்குக் கோபம் உண்டாயிற்று. அவன், உடனே அந்த மரத்தினிடம் வந்து, "இலவமரமே! நீ என்னைப் பலவாறு அவமதித்துப் பேசினதாக நாரதமுனிவர் கூறினார்; நான் காற்றுக்கு அதிபதி; என்னுடைய மேன்மையையும் வன்மையையும் உனக்குக் காட்டுவேன். நான் உன்னை நன்கு அறிவேன். படைக்குங் கடவுள் தம் படைத்தற்றொழிலைச் செய்த காலத்திலே உன்னிடமிருந்து இளைப்பாறினார். அதனால் உனக்கு இதுவரையில் அருள் செய்யலானேன். இழிவுமிக்க மரமே! அறிவற்றவனைப்போல் நீ என்னை அவமதிக்கிறாயாதலால், நீ அவ்வாறு செய்யாமலிருக்க இதோ என்னுடைய ஆற்றலைக் காட்டுகிறேன்" என்றான்.

இப்படி வாயுதேவன் கூறியவற்றைக் கேட்ட இலவமரம், அவனைப்பார்த்து, "வாயுவே! நீ உன் கோபத்தைச் செல்லுமிடத்திற் காட்டிக்கொள்; என்னிடத்தில் காட்டாதே; நீ கோபித்து என்னை என்ன செய்யமுடியும்? நீ உனக்குப் பிரபுவாயிரு; நான் உனக்கு அஞ்சமாட்டேன். நான் உன்னிலும் வலிமை மிக்கவன். 'புத்திமானே பலவான்' என்பது உனக்குத் தெரியாதா?" என்றது.

இவ்விதமாக அந்த இலவமரம் இயம்பியவற்றைக்கேட்ட வாயுதேவன், "உன் வலிமையின் அளவை நாளைக்கே காட்டுவேன்" என்று சொன்னான். பின்பு இரவு வந்தது.

உடனே, அந்தமரம், தான் வாயுவுக்குச் சமான மன்று என்று ஆலோசிக்கத் தொடங்கிற்று. "நான் நாரதரிடம் கூறியவை பொய்யானவை. நான் வாயுவின் வலிமைக்கீடான வலிமையுடையவனல் லன். வாயு எல்லாவற்றினும் வலிமை மிக்கவனே. நானே மற்ற மரங்களினும் வலிமை மிகவும்குறைந் தவன். ஆயினும், அறிவில் என்னையொத்த மரம் எதுவுமில்லை. என் அறிவு துணையாக எனக்கு வாயுவால் உண்டாகும் அச்சத்திலிருந்து நீங்கு வேன். காட்டிலுள்ள மற்ற மரங்களும் அவ்வறிவை அடைந்தவைகளானல் வெகுண்டுவரும் வாயுவால் எப்பொழுதும் துன்பம் அடையாது வாழலாம். வாயு வால் நான் நிலைகுலையாமல் இருக்க எவ்விதம் ஆராய்ந்து அறிகிறேனே அவ்விதம் இந்த அறி வற்ற மரங்கள் ஆராய்ந்தறியவில்லை" என்று இங் ஙனம் எண்ணிக் கலக்கம் உற்ற அந்த இலவமரம், தன் மனத்திலே நிச்சயித்துக்கொண்டபடி, உடனே தன்னுடைய கிளைகளையும் கவைகளையும் சிறு கொம்புகளையும் தானே கீழேவீழ்த்தி, காலைவேளை யிலே தன்மேல் கோபித்துவரும் வாயுவை எதிர் பார்த்துக்கொண்டிருந்தது. அப்பொழுது, பெருங் கோபம் அடைந்திருக்கிற வாயு பெரியமரங்களைத் தள்ளிக்கொண்டு அவ் விலவமரத்தின்பால் வந் தான்.

அவ்வாறு வந்த வாயு, அம்மரம் தன் உறுப் புக்களை எல்லாம் உதிர்த்துவிட்டு மொட்டையா

யிருப்பதைக்கண்டு நகைத்து, "இலவமரமே! இப்பொழுது எவ்விதத் துன்பத்தை நீயே உனக்குச் செய்துகொண்டாயோ அவ்விதத் துன்பத்தையே நான் உன்னிடமுள்ள கோபத்தால் உனக்குச் செய்வேன். உன்னுடைய கெட்ட நினைவு உன்னை இந்த இழிந்த நிலைமைக்குக் கொண்டுவந்துவிட்டது; நீ என் வலிமைக்கு அடங்கினவனுகிவிட்டாயல்லவா?" என்று களிப்புடன் சொன்னுன். அப்பொழுது அவ்விலவமரம் மிகவும் வெட்கமடைந்ததோடு நாரத முனிவர் மொழிந்த வசனங்களை நினைத்தும் பெரிதும் வருந்திற்று.

ஆதலால், ஒருவன் தன்னைத் தானே புகழ்ந்து கொள்ளக்கூடாது.

## 10. ஆகாய விமானம்

மக்களுக்குப் புதிய காரியங்களைச் செய்வதில் ஆசை உண்டாவது இயற்கை. அம்முறையில் பறவைகளைப்போல் ஆகாயத்தில் பறந்து செல்லவேண்டுமென்ற ஆசை மனிதனுக்கு வெகு காலமாய் இருந்துகொண்டே வந்தது. இந்த ஆசையை நிறைவேற்ற முதலில் உதவியாயிருந்தது புகைக்கூண்டு. பதினெட்டாம் நூற்றுண்டின் கடைசியில் மாண்ட்கால்பியர் என்று பெயர்பெற்ற இரண்டு பிரெஞ்சு சகோதரர்கள், காகிதத்தினுல் செய்த பைகளில், வைக்கோல், புல்முதலியவைகள் எரியும்போதுண்டாகும் புகையை நிரப்பிப் பறக்க விட்டார்கள். அவற்றி

லிருந்த உஷ்ணக்காற்றுக் குளிர்ந்தவுடன், இந்தப் புகைக்கூண்டுகள் இறங்கிக் கீழே விழுந்துவிட்டன. பின்பு, அவர்கள், நார்த்துணியினால் ஒரு பக்கம் திறந்த பெட்டி போல் செய்து, அதன் அடியில் கரி எரிந்துகொண்டிருக்கும் கும்மட்டியை வைத்து, அந்தப் பெட்டியிலிருந்து பல கயிறுகளைத் தொங்க விட்டு, அவைகளில் ஓர் இலேசான



புகைக்கூண்டு

பெரிய கூடையைக்கட்டித் தொங்கவிட்டார்கள்; அந்தக்கூடையில் வாத்து, ஆட்டுக்குட்டி முதலியவை போன்ற சிறியபிராணிகளை வைத்துப் புகைக்கூண்டைப் பறக்கவிட்டார்கள். அது சிறிதுநேரம் பறந்து கீழே இறங்கிற்று; அந்தப்பிராணிகளும் சௌக்கியமாய் வந்து சேர்ந்தன. காற்றைவிட மிகவும் இலேசான ஜலவாயு கண்டுபிடிக்கப்பட்டவுடன், பட்டினால் ஒரு பெரிய கூண்டு செய்து, ஜலவாயுவை அதனுள் அடைத்து, அவர்கள் அதில் முதலில் ஏறிச் சென்றார்கள். கப்பல் நீரில் மிதந்து செல்லுவது போல், அது காற்றில் மிதந்து சென்றது. ஆனால், காற்றடிக்கும் திசையில் அது தள்ளிக்கொண்டு போகப்பட்டது. பிறகு, சுமார் நூறுவருஷங்களா

கியும் பறக்கும் முறையில் முன்னேற்றம் ஒன்றும் ஏற்படவில்லை.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதியில் பெட்ரோல் எஞ்சின் செய்யப்பட்டவுடன், அதனைச் சிலர் இப் புகைக்கூண்டுகளில் அமைத்து, அவைகளை வேண்டியதிசையில் நடத்தக்கற்றார்கள். காற்றைவிட இலேசாக இருந்துகொண்டு கப்பல்களைப்போலக் காற்றில் மிதந்து செல்வதால் அவைகளை ஆகாயக்கப்பல்கள் என்று சொல்லுகிறார்கள். அத்தகைய கப்பலைப் பெட்ரோல் எஞ்சின் உதவியால் ஜெப்பிளின் என்ற ஒரு ஜர்மன் பிரபு கி. பி. 1900 ஆம் ஆண்டில் முதலில் கட்டிப் பறக்கவிட்டார். அவருக்குப்பின் இப்படிப்பட்ட கப்பல்களைக் கட்டுகிறவர்கள் அவர் பெயர் நினைவிலிருக்கும் வண்ணம் அவற்றிற்கு ஜெப்பிளின் என்றே பெயர் வழங்கலாயினர். போருக்கு உபயோகப்படும் விமானத்திற்கு மாத்திரம் ஜெப்பிளின் என்றும் மற்றவைகளுக்கு டிரிஜிபிள் என்றும் ஏரோபிளேன் என்றும் இக்காலத்தில் பெயர்கள் வழங்குகின்றன.

இருபதாம் நூற்றாண்டின் ஆரம்பத்தில்தான் காற்றைவிடக் கனமான ஒரு வண்டியைப் பறக்கச் செய்ய ஜனங்கள் முயன்றார்கள்; காற்றைவிடக் கனமான பறவைகளும், சிறுவர்களின் காற்றாடிகளும் எப்படிப் பறக்கின்றனவென்று கவனித்து நுட்பமான ஆராய்ச்சி செய்தார்கள். மெல்லிய அட்டை ஒன்றைப் பக்கத்தில் சுற்றிக்கொண்டு போகும்படி வீசியெறிந்து, அது நிலத்தைத் தொடுவதற்கு

முன்பு சிறிது தூரம் காற்றில் மிதந்து செல்வதைக் கவனித்து, காற்று அதைத் தாங்கி மிதக்கச் செய்கிறதென்று அறிந்தார்கள். ஒரு மெல்லிய தட்டோடு அதனை முன் தள்ளக்கூடிய யந்திரத்தை இணைத்து அதனைப் பறக்கச் செய்யலாமென்றறிந்த பிறகுதான், காற்றைவிடக் கனமானதும் பறக்கக் கூடியதுமான ஒரு விமானத்தை இயற்ற முடிந்தது.

ஒரு காற்றாடி ஆகாயத்தில் பறப்பதற்கு, அதிற் பிணைத்துள்ள கயிற்றை இழுத்துப் பிடித்துக் கொண்டே இருக்கவேண்டுமென்றும், கயிற்றை விட்டுவிட்டால் அது கீழே விழுந்துவிடுகிறதென்றும் உங்களுக்குத் தெரியும். நாம் காற்றாடியைக் காற்றுக்கு எதிர்ப்புறமாகக் கயிற்றின் மூலமாய் இழுத்துப்பிடிப்பதால், காற்று அதனைக் கீழே விழாமல் தாங்கி நிற்கிறது. காற்றாடி, காற்றுத் தன்னை வேகமாகத் தள்ளுவதாலும், அதில் கட்டியிருக்கும் கயிற்றை இழுத்துப் பிடிப்பதாலும், தன் அமைப்பின் விசேஷத்தாலும், காற்றுச் செல்லும் வழியில் சாய்ந்து கீழே விழாமல் நிற்கிறது.

நாம் நீந்தும்போது நம்முடைய கைகளையும் கால்களையும் அடித்து நீரைக் கீழ்நோக்கியும் பின்னேக்கியும் தள்ளுகிறோம். நீரைக் கீழ்நோக்கித் தள்ளும்போது, அது நம்மை மேலுக்குத் தூக்குகிறது; பின்னே தள்ளும்போது, அது நமது உடலை முன்னே தள்ளுகிறது. படகைத் தண்ணீரில் செலுத்தும்போது துடுப்பு நீரைப் பின்னே தள்ளு

வதையும், படகு முன்னே நகர்வதையும் காண்பீர்கள். நாம் நீந்துவதுபோலவேதான் பட்சிகள் பறப்பதும். பட்சிகள் இறக்கைகளை அடிப்பதால், காற்றில் மிதந்து முன்னேக்கிப் பறக்கும் சக்தி அவைகளுக்கு உண்டாகிறது. பட்சியின் தேக அமைப்பும் அதன் இறக்கைகளும் வாலும் எவ்விதமான காற்றடிக்கும் போதும் பக்கத்தில் சாய்ந்து புரண்டுவிழாமல் அதனைக் காக்கின்றன. (பறவை இறக்கைகளை அடித்து உண்டாக்கும் சக்தியையும், நாம் நீந்தும்போது கைகால்களை அடித்து உண்டாக்கும் சக்தியையும் காற்றாடியைப் பறக்கவிடும்போது கயிற்றை இழுத்து உண்டாக்கும் சக்திக்கு ஒப்பிடலாம்.) பக்கத்தில் சாய்ந்து விழாமல் காற்றாடியைப்போலச் சமநிலையில் நிற்கக்கூடிய ஒரு விமானத்தை அமைத்து, அதனை முன் தள்ளக்கூடிய சக்தியை உண்டுபண்ணும் ஒரு யந்திரத்தை அதில் இணைத்தால், அந்தவிமானம் பறந்துசெல்ல முடியும். இம்மாதிரி செய்யப்பட்டுக் காற்றைவிடக் கனமானதாயுள்ள ஒரு பறக்கும் யந்திரத்தைத்தான் நாம் 'ஏரோப்ளேன்' என்றும், 'ஆகாயவிமானம்' என்றும் சொல்லுகிறோம்.

ரைட் சகோதரர்கள் என்ற இரண்டு அமெரிக்கர்களே, காற்றைவிடக் கனமான விமானத்தை முதலில் பறக்கச் செய்து காட்டியவர்கள். இவர்கள் முதலில் கி.பி. 1900 ஆம் ஆண்டில் செய்த விமானத்தில் இறக்கைகள்போன்ற இரண்டு தட்டுக்களும் முன்பக்கத்தில் ஒரு மெல்லிய பலகையும் பின் பக்கத்தில் படகின் சுக்கான் போன்ற ஒரு மெல்லிய

பலகையுமிருந்தன. அதில் நன்றாய்ப் பழகின பிற்பாடு, 1902 ஆம் வருஷத்தில், 30 மைல் வேகத்துடன் காற்றில் மிதந்து, பக்கங்களில் திரும்பிச் செல்லக்கூடிய ஆகாயவிமானங்களில் சாவதானமாகப் பறந்தார்கள். அடுத்த வருஷத்தில், பெட்ரோலின் ஆவியால் ஓடும் ஒரு மோட்டார் யந்திரத்தை இதனுடன் சேர்த்து, நாம் இப்போது, 'ஏரோப்ளேன்' என்று சொல்லும் ஆகாயவிமானத்தை அமைத்து, அதில் அவர்கள் பறந்து காட்டினார்கள். பின்பு, இரண்டு வருஷங்களில், மணிக்கு 40-மைல் வேகத்தில் முக்கால் மணிவரையில் பறந்தார்கள். கி. பி. 1908 ஆம் வருஷத்தில், அவர்கள், பாரிஸ் நகரம் சென்று, அவ்விடத்தில் அதில் வேறு ஜனங்களையும் ஏற்றிக்கொண்டு பறந்து காட்டினார்கள். அதற்குப்பிறகு, அனேகர், பெரிய விமானங்களைக் கட்டி, அவைகளில் மிகவும் சக்திவாய்ந்த எஞ்சின்களைப் பொருத்தி, அதிக வேகமாக நெடுந் தூரம் பறக்கக் கற்றனர். ஐரோப்பிய மகாயுத்தத்தில் ஏரோப்ளேன் மிகவும் சீர்திருத்தப்பட்டு முன்னேற்றமடைந்தது.

விமானங்களில் அனேக வகைகளிருக்கின்றன. ஆனால், அவை அனேகமாய் ஒன்று அல்லது இரண்டு தட்டுக்களாலாகிய இறக்கைகளுள்ளனவாயிருக்கும். தட்டு என்பது மெல்லிய இலேசான சட்டங்களின்மேல் நார்த்துணி பரப்பப்பட்டது. நார்த்துணியின்மேல் நீர் ஒழுகாதபடி மேற்பூச்சுப் பூசப்பட்டிருக்கும். இருதட்டு விமானத்தில்





ஓர் ஆகாய விமானம்.

இரண்டு தட்டுக்கள் மேலுங்கீழுமாயிருக்கும். அடித் தட்டின்மேல் கால்களை நிறுத்தி அவைகளின்மேல் இரண்டாவதாகிய மேற்றட்டுப் பொருத்தப்பட்டிருக்கும்.

படத்தில் ஜனங்களை ஏற்றிக்கொண்டுபோகும் இரண்டுதட்டுள்ள பெரிய விமானமொன்று காட்டப் பட்டிருக்கிறது. இதன் முன்பக்கத்தில் ப்ரொபெல்லர் என்ற அலகுகளுடன் கூடிய ஒரு பெரிய காற்றாடியிருக்கிறது. இதன் இருபுறங்களிலும் வேறு இரண்டு ப்ரொபெல்லர்களுமிருக்கின்றன. இவைகளுக்குப் பின்னேயிருக்கும் எஞ்சின்களின் சக்தியால் இவை நிமிஷத்துக்கு 1500 தடவைகளுக்கு மேல் சுற்றுகின்றன. நாம் நீந்தும்போது கைகால்களை அடிப்பதால் நீரைத் தள்ளுவதுபோல், காற்றாடியின் அலகுகள் சுழலும்போது காற்றைக் கிழிக்கும் பின்னுக்கும் தள்ளுகின்றன. ஆகையால், விமானம் முன்னே செல்லுகிறது. பின்னே தள்ளப்பட்ட காற்றின் வேகம் தட்டுக்களைத் தூக்குகின்றது.

ப்ரொபெல்லருக்குப் பின்பக்கத்தில் பெட்டிபோல் பள்ளமாயிருக்கும் ஓரிடத்தில் ஒருவன் உட்கார்ந்திருப்பதைப் பார்க்கலாம். அவன்தான் விமானத்தை ஓட்டுபவன். அவனுக்குப் பின்னால் சற்றுக் கீழ்ப்புறமாய் ஜனங்கள் உட்காரும் இடம் இருக்கிறது. அதன் ஜன்னல்கள் மாத்திரம் தெரிகின்றன; உட்புறம் தெரியவில்லை. அதன் அடிப்

புறத்தில் மோட்டாரின் சக்கரங்கள் போல இரண்டு சக்கரங்களிருக்கின்றன.

விமானம் ஓட்டுபவன் விமானத்தை ஓட்ட ஆரம்பிக்கும்போது ஒரு பிடியைத் திருப்புவான். உடனே, பேரிரைச்சலுடன் அடியிலிருக்கும்சக்கரங்களின் உதவியால் தரையின்மேல் அது ஓட ஆரம்பிக்கிறது. வர வர வேகமாயோடி ஓரளவு வேகம் ஏற்பட்டவுடன் காற்றின் வேகம் விமானத்தை மேலே தூக்குகிறது. விமானம் காற்றில் மெதுவாய்ச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டு மேலே கிளம்புகிறது. அது வேண்டிய அளவு உயரத்தில் கிளம்பிய பிற்பாடு, விமானம் ஓட்டி தான் போகவேண்டிய திசையில் அதனைத் திருப்பி முன்செல்லச் செய்கிறான். ஆகாயவிமானம், துவிசக்கரவண்டியைப் போலவே, தன் வேகத்தினால் ஆகாயத்தில் தன்னைச் சமநிலைப்படுத்திக்கொண்டு மிதக்கிறது. வால் பக்கத்திலிருக்கும் இரு சிறிய தட்டுக்களும் விமானத்தை மேலே ஏறச்செய்யவும் கீழே இறங்கச் செய்யவும் உபயோகப்படுகின்றன. இவைகளுக்குப் பின்னால் செங்குத்தாயிருக்கும் இரண்டு சிறிய தட்டுக்களும், படகிலிருக்கும் சுக்கான் போல, விமானம் பக்கங்களில்திரும்ப உபயோகமாகின்றன.

ஆகாயவிமானத்தின் மூலமாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்துக்கு மிக்க வேகமாய்ச் செல்லலாம். இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு ஐந்து தினங்களில் வந்துவிடலாம். மூன்று தினத்திலும் வரக்

கூடும். ஆகாயவிமானங்கள் இந்தியாவிலிருந்து வாரத்துக்கு இரண்டுமுறை ஜனங்களையும் தபால்களையும் சுமந்துகொண்டு இங்கிலாந்துக்குப் போய் வருகின்றன. அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் விமானப் பிரயாணம் ரெயில் பிரயாணத்தைப் போலவே சர்வ சாதாரணமாகிவிட்டது. விமானங்கள் சாதாரணமாய் 2000, 3000 அடி உயரத்தில் மணிக்கு 100 மைல்களுக்குக் குறையாத வேகத்தில் பறந்து செல்லுகின்றன. போட்டி விமானங்கள் மணிக்கு 400 மைல் வேகத்துக்குமேலும் செல்லுகின்றன.

ஆகாயவிமானம் ஏறி இறங்குவதற்கு மேடு பள்ளமில்லாத விசாலமான இடம் வேண்டும். விமானம் சற்றுத் தூரம் தரைமேல் ஓடியே காற்றினால் மேலே கிளம்பும்; இறங்கும்போதும் பூமியில் சிறிது தூரம் ஓடிய பிறகே நிற்கும். இந்தமாதிரி விமானங்கள் ஏறி இறங்குமிடத்திற்கு 'ஏரோட்ரோம்' என்று பெயர். இதனை விமான நிலயம் என்றும் கூறலாம். ஏரோட்ரோம்கள் உலகத்தில் பல இடங்களிலும் ஏற்பட்டிருப்பதால் இப்போது விமானங்களின் மூலமாய் வெகு தூரமிருக்கும் இடங்களுக்குப் போகச் சாத்தியமாகிறது. விமானங்கள் வேறு விதங்களிலும் நமக்குப் பயன்படுகின்றன. வடதுருவம், தென் துருவம், இமயமலைச் சிகரங்கள், அடர்ந்த காடுகள், பெரிய பாலைவனங்கள் போன்ற தரைவழியாய்க் கடக்கமுடியாத இடங்களையும் விமானங்களினுதவியால் கடக்கலாம்.

விமானங்களில் ஏறிச்செல்லும் ஆவலை ஜனங்களுக்கு உண்டாக்க 'ஏரோ க்ளப்' என்னும் ஒரு சங்கத்தை எல்லாப் பெரிய நகரங்களிலும் ஏற்படுத்தி இருக்கிறார்கள். சென்னையிலும் ஓர் ஏரோ க்ளப் இருக்கிறது.

# 11. கோப்பெருஞ்சோழன்

கோப்பெருஞ்சோழன், பண்டைக்காலத் தமிழ் நாட்டு முடிமன்னர் மூவருள், சோழர் குடியிற்பிறந்தவன்; திரிசிராப்பள்ளியைச் சார்ந்த உறையூரைத் தலைநகராகக்கொண்டு சோழநாட்டைச் செங்கோன் முறைமை தவறாது ஆண்டவன்; கல்வியறிவிற் சிறந்தவன்; இனிய தமிழ்ப்பாட்டுக்களைப் பாடிய பாவலன்; தமிழ்ப் புலவர்களைப் பெரிதும் போற்றியவன்; தன் கல்விச் சிறப்பாலும் புலவர்களோடு கலந்த நட்புப் பெருமையாலும் அறத்தின் மேம்பாட்டையும் அதன் வகைகளையும் நன்கு அறிந்தவன்; அந்த அறவகைகளையெல்லாம் இயன்ற வழிகளால் எப்பொழுதும் செய்வதிலேயே மனம் ஊன்றியவன்; பொத்தியார், பிசிராந்தையார், புல்லாற்றூர் எயிற்றியனார், கருவூர்ப்பெருஞ்சதுக்கத்துப் பூதநாதனார், கண்ணகனார் முதலிய புலவர்பெருமக்களைத் தன் ஆருயிர் நண்பர்களாகக் கொண்டவன்.

இந்த அரசனுக்குப் புதல்வர் இருவர் இருந்தனர். அவ்விருவரும் தம் தந்தையாகிய இவனிடம்

எக்காரணத்தினாலோ பகைகொண்டனர். அரசன் தன் மக்களின் குணக்கேட்டை அறிந்து அவர்களை வெறுத்தான். அவ்விருவரும் போர்புரியத் துணிந்து படைதிரட்டிக்கொண்டு வந்தனர். அரசனும், அச் செய்தி கேட்டு, அவருக்கெதிராகப் போர்புரிய எழுந்தான். அப்பொழுது இவனுடன் இருந்த புல்லாற்றூர் எயிற்றியனார், இவனைப் பார்த்து, "வேந்தே! உன்னுடன் சண்டை செய்யவந்த இவ் விருவரும் உன் பகைவரல்லர்; நீயும் இவருக்குப் பகைவனல்லை; நீ விண்ணுலகம் அடையும்போது உன் செல்வங்களும் அரசுரிமையும் இவர்களையே அடையவேண்டும்; இதனை நீ அறிந்தவனே; இவர்கள் தோற்றோடினால் உன் செல்வங்களை யாருக்குக் கொடுப்பாய்? நீ அவர்களுக்குத் தோற்று விட்டாலோ, அதைக்காட்டிலும் பெரும்பழி வேறில்லை; ஆகலால், உன் சினத்தையும் போர் முயற்சியையும் விட்டுவிடு; நல்ல கதியை அடைவதற் கான நல்வினைகளைச் செய்" என்று மொழிந்தார்.

இவ்வாறு புல்லாற்றூர்எயிற்றியனார் உரைத்த உறுதிச்சொற்களைக் கேட்ட கோப்பெருஞ்சோழன் மனம், சமாதானம் அடைந்தது. பொங்கியெழுந்த அவன் கோபம் மங்கிப்போயிற்று. அவன் தன் புதல்வரிடம் அரசாட்சியையும் செல்வங்களையும் கொடுத்துவிட்டு மறுமைக்கு வேண்டியவைகளை எண்ணலானான். இந்த நிலையை அடைந்த அரசன், தன் குமாரர் செய்கையால் தன் குலத்துக்கும் தனக் கும் நேர்ந்த மானக்கேட்டை எண்ணி எண்ணி,

'மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே' என்றபடி, உயிர்துறக்கத் துணிந்தான். அரசன் அத்துணிவை நிறைவேற்ற அந்தக் காலத்தார் வழக்கமான, 'வடக்கிருத்தல்' என்னும் வழியைப் பின்பற்றலானான். (வடக்கிருத்தலாவது யாதேனும் ஒரு முக்கிய காரணத்தினால் உயிர்விடத் துணிந்தவர், பரிசுத்தமான ஒரு தனியிடம் அடைந்து வடக்கு நோக்கி இருந்து, உணவு முதலியவற்றை நீக்கி, கடவுளை எண்ணிக்கொண்டிருந்து உயிர் நீத்தலாம்.

அந்தக் காலத்தில், பாண்டிய நாட்டிலே பிசிர் என்னும் ஊரிலே ஆந்தையார் என்னும் பெயர் பெற்ற ஒரு புலவர் இருந்தார். அவர் பிசிராந்தை யார் என்றும் வழங்கப்பெற்றார். அவர் கோப்பெருஞ் சோழனுடைய நற்குணங்கள் பலவற்றையும் கேள்வி யுற்றார். அவனுடைய நற்குணங்கள் அவர் மனத் திற்கு ஒத்தனவாயின. அப்படியே அரசனும் பிசிராந்தையாருடைய சிறந்த குணங்களைக் கேள் விப்பட்டான். அவருடைய குணங்கள் அவன் மனத்திற்கு ஒத்திருந்தன. அதனால், அவ்விருவருக் கும் நட்புண்டாகி நாளுக்கு நாள் வளர்ந்து வருவ தாயிற்று. அவ்விருவரும் தம்முள் ஒருவரைப்பற்றி ஒருவர் பேசுவதும் நினைப்பதுமாய் இருந்தனர். இச் செய்கைகளால் அவ்விருவருக்கும் உணர்ச்சி ஒத் தது. இவ்வாறு உணர்ச்சி ஒத்தலாகிய நட்பே தலை நட்பென்று பாராட்டப்படுவது. ஓரிடத்தில் வசித்த லால் உண்டாகும் நட்பும் பழகுவதால் உண்டாகும் நட்பும் உணர்ச்சி ஒத்தலால் உண்டாகும் நட்பை

விடத் தாழ்ந்தவைகளே. கேள்வியால்மாத்திரம் உண்டான இவ்விருவரது நட்பின் மேன்மையைப் பரிமேலழகர் என்னும் சிறந்த உரையாசிரியர்,

> “புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
> நட்பாம் கிழமை தரும்”

என்ற திருக்குறளின் விசேட உரையிலே எடுத்துக் கூறியிருக்கிறார்.

கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் தம் உத்தம நட்பின் பயனை அனுபவித்து வருங் காலத்திலேதான், அந்தச் சோழமன்னன் தன் மக்களின் தீச்செயல் காரணமாக இவ்வுலகியலை வெறுத்து வடக்கிருத்தலை மேற்கொண்டான்.

அப்பொழுது, கோப்பெருஞ்சோழன், தன்னிடம் கூடியிருந்த சான்றோரைப் பார்த்து, “என் நண்பனாகிய பிசிராந்தை இப்பொழுது வருவான்” என்றான். அதனைக் கேட்ட சான்றோர், “அவர் வாரார்” என்றனர். அது கேட்ட அரசன், “என் ஆருயிர் நண்பன் நெடுந்தூரத்திலுள்ள பாண்டி நாட்டில் இருக்கிறான். அவன் என் செல்வக்காலத்திலே என்னிடம் வாராதிருந்தாலும், என் துன்பக் காலத்தில் வாராதிருக்க மாட்டான்” என்று கூறினான். வேந்தன் இப்படிச் சொல்லியும், சான்றோர் ஐயம் நீங்கவில்லை. அவன், பின்னும் சொல்லுகின்றான்:— “சான்றோர்களே! ‘உன்னைப்பற்றி அவர் கேட்டிருக்கிறாரேயன்றிச் சிறிதுபொழுதும் பார்த்ததில்லையே; பல வருடங்கள் கலந்து பழகிய நண்பர்

களும் நீ கூறியபடி நடத்தல் அரிதேயாம்' என்று எண்ணி ஐயப்படாதீர்கள்; 'அவன் என்னை ஒரு பொழுதும் இகழ்ந்திலன்; இனிய குணங்களையுடைய வன்; பிணித்த நட்புடையவன்; புகழைக் கெடுக்கும் பொய்யை விரும்பாதவன்; தன் பெயரைப் பிறருக்குச் சொல்லும்போது, 'என் பெயர் பேதைச் சோழன்' என, என் பெயரையே தன் பெயராகக் கூறும் அன்பும் மிக்கவன்; அதற்கு மேலும் இப்படி யான் துன்பமுறுங் காலத்தில் அங்கே நிற்க மாட்டான்; இப்பொழுதே வருவான். அவனுக்கும் இடம் ஒழித்துவையுங்கள்'' என்று சொன்னான்.

இவ்வாறு கூறிய பிறகு, கோப்பெருஞ் சோழன் வடக்கிருந்தான். பிசிராந்தையார், அவன் சொன்ன வண்ணம், அங்கே அப்பொழுது வந்து சேர்ந்தார். அந்த அரசனுக்கு ஆருயிர் நண்பரும் அமைச்சரும் சிறந்த தமிழ்ப் புலவருமாகிய பொத்தியார் அந்தப் பாண்டி நாட்டுப் பிசிராந்தையாரது வரவைக் கண்டார்; அளவற்ற ஆச்சரியத்தையும் ஆற்றவொண்ணாத துன்பத்தையும் அடைந்து, ''இவ்வேந்தன் தன் பெருஞ்செல்வங்களை யெல்லாம் துறந்து இவ்விடத்து இவ்வாறு வரத்துணிந்தது ஆச்சரியப்படக்கூடியது; இவன் இவ்வாறு துணிந்ததைக் காட்டிலும், வேற்றரசனது நாட்டிலே விளங்கிய சான்றோன், நட்பே ஆதாரமாக இத்தகைய துன்பக்காலத்துத் தவறாது இவ்விடத்திற்கு வருதல் ஆச்சரியப்படக்கூடியது. இவ்வாறு வருவான் என்று துணிந்து சொல்லிய வேந்தனதுபெருமையும்

அவன் சொல்லிய சொல் தவறாதபடி வந்தவனது அறிவும் என்னை என்னை ஆச்சரியத்தை மிகவும் அதிகப்படுத்துகின்றன. வேற்று நாட்டுப் பெரியோன் மனத்தைத் தனக்கு உரிமையுடையதாகச் செய்துகொண்ட இவ்வரசனை இழந்த இந்தத் தேசம் என்ன துன்பம் அடையுமோ? இதுதான் இரங்கத்தக்கது" என்று கூறி மிக வருந்தினார்.

இப்படிப் புலவர் வியப்பும் வருத்தமும் அடைய அங்கே வந்த பிசிராந்தையார், கோப்பெருஞ்சோழன் வடக்கிருந்த இடத்தை அடைந்தார். அங்கே கூடியிருந்த சான்றோர்கள், அவரைப் பார்த்து, "ஐயா! உமக்கு ஆயுள் பலவோ? நரை உமக்கு இல்லையோ?" என்று வினவினார்கள். அதற்குப் பிசிராந்தையார், "யான் வயது முதிர்ந்தவனாயிருந்தும் நரையில்லாதிருப்பதற்குக் காரணம் கூறுவேன்: கேளுங்கள்: என் மனைவியும் மக்களும் அறிவு நிரம்பியவர்: என் ஏவலாளர் யான் எண்ணியதையே எண்ணுபவர்; அரசனும் அல்லவை செய்யாது ஆள்கின்றான்; அதற்கு மேலும், யான் இருக்கின்ற ஊரிலே ஐம்புல ஆசையடங்கிய சான்றோர் பலர் விளங்குகின்றனர்; இப்படிப்பட்டவர்களிடையில் யான் கவலையின்றி வாழ்கின்றேன்; கவலையற்ற வாழ்வே நரை வாராததற்கும் ஆயுள் விருத்திக்கும் காரணம்" என்றார்.

பிறகு, பிசிராந்தையார் தம் ஆருயிர் நண்பனாகிய வேந்தனைப்பார்த்து மனம் வருந்தி அவனுடன் தாமும் வடக்கிருந்தார். அவ்விருவரும் அப்படி

உயிர்விட்ட அவ்விடத்திலே, அக்கால வழக்கப்படி, அவர்கள் வடிவைக் கல்லிலே அமைத்து, அதில் அவர்களுடைய குணமேம்பாடுகளை எழுதி, அதனை நட்டார்கள். இதுவே நடுகல் என வழங்கப்படும்.

## 12. காவிரிப்பூம்பட்டினம்

ஔவைப் பிராட்டியார், "சோறுடைத்து" எனப் புகழ்ந்த சிறப்பினை உடையது சோழவள நாடு. முற்காலத்தில் அதற்குப் பல இடங்கள் தலை நகரங்களாய் இருந்தன. அவற்றுள், காவிரிப்பூம் பட்டினம், ஒன்றாகும். இது, சோழமன்னர்க்குத் துறைமுகத் தலைநகரமுமாகும். இக்காவிரிப்பூம் பட்டினம், இப்பொழுது கீழைக் கடற்கரையில் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில், ஒரு சிறிய ஊராக இருக்கிறது. இது, தஞ்சாவூர் ஜில்லாவி லுள்ள சீகாழித் தாலுக்காவைச் சேர்ந்தது.

பட்டினம் என்பது கடற்கரையிலுள்ள ஊர் களைக் குறிக்கும் பொதுப்பெயர். காவிரிப்பூம்பட்டி னம் அக்காலத்திலிருந்த கடற்கரை ஊர்களில் மிகச் சிறந்து விளங்கியதனால், 'பட்டினம்' என்ற சிறப்புப் பெயராலும் வழங்கப்பட்டது. இது, காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் இருப்பதால் காவிரிப் பட்டினம், காவிரிப்பூம்பட்டினம் என்றும் வழங்க லாயிற்று. நதி கடலோடு கலக்கும் இடத்தைச் சங்கமம் என்பார்கள். இதனை ஆற்றுமுகம் எனப் பொருள்படும் புகார் எனக் கூறுவதும் உண்டு.

இவற்ருல், இதற்குச் சங்கமத்துறை, புகார், பூம்புகார் என்பனவும் பெயர்களாயின. காவிரிக்குப் பொன்னி என்பது ஒருபெயர். அதனுல், இப் பட்டினம் பொன்னித்துறை என்றும் பெயர் பெற்றது. இதற்குக் காகந்தி, சம்பாபதி என்ற வேறு பெயர்களுமுண்டு.

காவிரிப்பூம்பட்டினம் வன்மை வாய்ந்த கோட்டைகளையும், அழகான சோலைகளையும், உத்தியானவனங்களையும், செய்குன்று முதலியவை களையும், மக்கள் வாழ்க்கைக்கு வேண்டிய பல வளங் களையும் பெற்றிருந்தது. இது அகநகர், புறநகர் என்று பிரிக்கப்பட்டிருந்தது. இவற்றுள், அக நகரும் அதனைச் சார்ந்தனவும் பட்டினப்பாக்கம் எனப்படும். புறநகரும் அதனைச் சார்ந்தனவும் மருவூர்ப்பாக்கம் எனப்படும்.

அகநகரில் அரசர் வீதிகளும் வணிகர் வீதிகளும் வேளாளர், வைத்தியர், சோதிடர் முதலானவர்க ளுடைய இல்லங்களும் இருந்தன. அங்கே யாழ், குழல் முதலியவற்றில் நன்கு பயின்ற பாணர்களும் இருந்தார்கள். சங்குவளையல்களைச் செய்தல், முத் துக்கோத்தல், யானை குதிரைகளைப் பழக்குதல், தேரோட்டுதல் முதலியவற்றைச் செய்யும் தொழி லாளர்களும், வேறு பலரும் அங்கே இருந்தார்கள்.

புறநகரில் கூலம், உப்பு, ஊன் முதலிய உண வுப்பண்டங்களும் இரத்தினங்களும் பட்டு, பருத்தி, எலிமயிர் முதலியவற்ருல் ஆகிய சிறந்த வேலைப்

பாடுள்ள ஆடைகளும் விற்பதற்காக வைக்கப்பட்டிருக்கும். வாடாமாலை, பூங்கொத்துமுதலியவற்றைச் செய்யும் கெட்டித்தொழிலாளர்களும், தச்சர், கொல்லர், கன்னார், தட்டார் முதலிய தொழிற்கூட்டத்தினர்களும் ஆங்காங்குத் தங்கித் தொழில்புரிந்தார்கள். ஆரம், அகில், சுண்ணம், சாந்து முதலிய வாசனைப் பண்டங்களையும், பிட்டு, அப்பம் முதலிய தின்பண்டங்களையும் விற்பவர், அங்கும் இங்கும் திரிந்துகொண்டிருப்பர். யவனர் முதலிய அயல் நாட்டு மக்கள், முத்து பவளம் மிளகு வாசனைப்பண்டம் ஆகிய இவைகளை வாங்கி ஏற்றுமதி செய்யவும், பாவைவிளக்கு கண்ணாடிச்சாமான் மது இவைகளை இறக்குமதி செய்யவும் கடற்கரையோரங்களில் உள்ள கட்டிடங்களில் குடியேறி இருந்தார்கள்.

அகநகர், புறநகர் என்ற இரண்டு இடங்களுக்கும் இடையிலுள்ள பகுதியே பொதுநிலமாகிய நாளங்காடியாகும். அங்கே, பகலில் வியாபாரம் நடைபெறும் நாளங்காடிகளும், இரவில் வியாபாரம் நடைபெறும் அல்லங்காடிகளும் இருந்தன; ஒவ்வொரு கடையிலும் விளம்பரத்துக்காக அடையாளக் கொடிகள் அமைந்திருக்கும்.

இப் பட்டினத்துப் பெண்கள், முல்லை மல்லிகை செங்கழுநீர் குவளை போன்ற மலர்களாலாகிய மாலைகள், அகில் சந்தனம் முதலியவற்றாலாகிய வாசனைப்புகைகள், வாசனைப்பொடிகள் முதலியவற்றை உபயோகித்து வந்தார்கள். அவர்கள் விளக்கேற்றும் காலத்தில், 'அரசன் வாழ்க' என்று

சொல்லி ஆறுகினாலும் செல்லினாலும் நீரினாலும் கடவுளை வழிபடுவார்கள்.

கடற்கரையில் வாழும் பரதவர், பருவகாலங்களில் மீன்பிடிக்கமாட்டார்; அந்நாட்களில் சுத்தமாயிருந்து நீராடி மணலைக் குவித்துச் சுறுக்கொம்பை நட்டு, அதனை அலங்கரித்து, ஆடல் பாடல்களோடு வருணனை வழிபடுவர். பரதவர்களிற் பணக்காரர், மாடி வீடுகளில் வாழ்ந்தனர். அவர்களுடைய வீடுகளில் இருக்கும் விளக்குக்களும் படகுகளில் இருக்கும் விளக்குக்களும் காண்போர்க்கு மகிழ்ச்சியைத் தரும்.

இக்காவிரிப்பூம்பட்டினத்தில் சிவன், முருகன், பலராமன், கண்ணன், மன்மதன் முதலியோர்க்கு ஆலயங்கள் இருந்தன. அந்த ஆலயங்களில் துறவிகள் புராணம் முதலிய புண்ணிய கதைகளைப் படித்துப் பொருள் கூறுவார்கள். கலாசாலை, மருத்துவச்சாலை, அன்னசத்திரம், அறவோர்பள்ளி, பௌத்தமடம், விளையாட்டிடம் முதலியன ஆங்காங்கு மக்களுக்குப் பயன்படும்படி அமைக்கப்பட்டிருந்தன. மேலும், இந்தப் பட்டினத்தில் ஐந்து மன்றங்கள் இருந்தன. அம்மன்றங்கள் ஐந்தும் அரசனுக்கு அரசுமுறைசெய்வதில் பெரிதும் உதவியாயிருந்தன.

அந்த மன்றங்கள் வெள்ளிடைமன்றம், இலஞ்சிமன்றம், நெடுங்கல்நின்றமன்றம், பூதசதுக்கம், பாவைமன்றம் எனப் பெயர்பெறும். அவற்றுள், வெள்ளிடை மன்றம், அயலார் பொருளைத் திருடியவர்களை, அப்பொருளைக் கொண்டுபோகமுடியாமல்

தந்து, பொருளுங்கையுமாக அங்கேயே திரியும்படி செய்து நடுங்கப்பண்ணுவது. இலஞ்சிமன்றம், கூனர் குறளர் ஊமர் செவிடர் தொழுநோயினர் முதலானவர்கள் முழுகி வலஞ்செய்தால், அவர் அக்குறைகளின் நீங்கி மகிழுந் துணைசெய்யும் பொய்கையினையுடையது. நெடுங்கல்நின்றமன்றம், வஞ்சகமாக மருந்தூட்டப்பட்டுப் பித்தரானவர் மயக்கமும் துன்பமும் அடைந்தவர் பாம்புகடியுண்டோர் பேய்க்கோட்பட்டோர் ஆகியவர்கள் வலம் வந்து வணங்க, அவர்களுடைய துன்பங்கள் நீங்கும்வண்ணம் ஒளியுடன் நின்றது. பூதசதுக்கம், அரசனுக்குக் கேடுசூழ்பவர் கற்புநெறிதவறியவர் துறவிபோலத் திரிபவர் பொய்ச்சான்று பகர்வோர் ஆகிய இவர்களைப்பாசத்தாற் கட்டிப்பிடித்து அறைந்து உண்ணும் இயல்பினையுடைய பூதத்தைப் பெற்றிருப்பது. பாவைமன்றம், அரசன் செங்கோல் முறையில் தவறி நடந்தாலும் நியாயசபையார் நடுவுநிலைமை தவறி அநீதியாக நடந்தாலும் வாய்திறந்து பேசாமல் அழுது காட்டும் இயல்பு வாய்ந்த பாவையை உடையது.

இந்தப் பட்டினத்தில், அரசனுடைய நன்மையைக் கருதி ஆண்டுதோறும் இந்திரவிழா நடந்து வந்தது. முதலில், அரசன் கட்டளைப்படி, விழாவை நடத்தவேண்டிய காலம், முறை முதலியவற்றைப் பற்றி முரசறைவிக்கப்படும். குறித்த காலத்தில், தருநிலைக் கோட்டத்தில் இந்திரத்துவசம் ஏற்றப்படும். அந்த விழாவின்பொருட்டுத் தெருக்களில் புதிய நுண்மணல் பரப்பி நீர் தெளிக்கப்படும். நகர

மாந்தர் வீடுகளை வாழை, கமுகு, தோரணம் முதலியவற்றால் அலங்கரிப்பர். திண்ணைகளில் விளக்கு, பூரணகும்பம் முதலிய மங்கலப்பொருள்கள் வைக்கப்படும். இந்திரனைக் குறித்து ஆடல்பாடல்களும், அன்னதானம் முதலியனவும் நடைபெறும். இப்படி இருபத்தெட்டுநாட்கள் நடந்து, கடைசி நாளாகிய சித்திராபௌர்ணமையன்று நகரத்து ஜனங்கள் வண்டி, பல்லக்கு முதலியவற்றிற் கடற்கரைக்குச் சென்று கடலில் நீராடுவார்கள்; தாழை, புன்னை முதலியன அடர்ந்த சோலைகளில் விளையாடிப் பகற்பொழுதைப் போக்குவார்கள். முறைப்படி ஏற்றப்பட்ட இந்திரத்துவசம் இறக்கப்படும். இதனோடு இந்திரவிழா நிறைவேறியதாகும்.

இந்தப் பட்டினத்தில் ஒரு சிறந்த துறைமுகம் இருந்தது. இரவிலே கடலில் வந்துகொண்டிருக்கும் மரக்கலங்களுக்குக் கரையிருக்கும் இடத்தைத் தெரிவிக்கும்பொருட்டுக் கட்டப்பட்டிருந்த கலங்கரை விளக்கம் ஒன்றும் அங்கே இருந்தது. அத்துறைமுகத்திலே சீனம், வங்கம், ஈழம் முதலிய நாடுகளிலிருந்து பல கப்பல்கள் ஏற்றுமதி இறக்குமதிகளின் பொருட்டு வந்து தங்கும். சுங்கம் வாங்குவோன், அங்கே வரும் பண்டங்களின்மேல் அரசனுடைய புலி முத்திரையை இடுவான். அயல்நாட்டு வணிகர்கள் இருக்கத் தக்க பல கட்டிடங்களும் அங்கே இருந்தன.

கரிகாற் பெருவளத்தான், கிள்ளிவளவன் முதலிய பேரரசர்கள் இந்தப் பட்டினத்திலிருந்து அரசு

செலுத்தி வந்தார்கள். கண்ணகி, மணிமேகலை முதலிய பெண்மணிகள் தோன்றியது இப்பட்டினத்திலேயே. கடியலூர் உருத்திரங் கண்ணனார், இளங்கோவடிகள், மதுரைக் கூலவாணிகன் சாத்தனார் போன்ற புலவர் பெருமக்கள் முறையே பட்டினப்பாலை, சிலப்பதிகாரம், மணிமேகலை என்னும் நூல்களிலே இந்தக் காவிரிப்பூம் பட்டினத்தைப் புகழ்ந்து பாடியுள்ளார்கள். பிற்காலத்தில், முற்றத் துறந்த பெருஞானியாராகிய பட்டினத்தார் தோன்றியதும் இந்நகரத்திலேயே.

## 13. உத்தம சகோதரன்

### (பரதன்)

அயோத்தி வேந்தராகிய தசரத சக்கரவர்த்தியின் குமாரர்களான இராமர் முதலிய நால்வருக்கும் திருமணம் நிறைவேறிய பிறகு, பரதன், தன் பாட்டனாரின் விருப்பப்படி, கேகயநகரத்திற்குச் சத்துருக்கனனுடன் சென்றிருந்தான். இராமர் இலட்சுமணனுடன் அயோத்தியிலே இருந்தார்.

அப்போது, ஒருநாள் தசரதர் தம் மூத்த குமாரராகிய இராமருக்கு அரசை அளிக்க எண்ணினார். தமது கருத்தைத் தம் குலகுருவாகிய வசிட்ட முனிவரிடத்திலும் சுமந்திரன் முதலிய மந்திரிமாரிடத்திலும் கூறினார்; குடிமக்களுடைய எண்ணத்தையும் அறிந்துகொள்ள முயன்றார். எல்லாரும், 'இராமரை முறைப்படி அரசராக்கவேண்டும்' என்று ஒருமனமாய்க் கூறினர்.

பிறகு, தசரதரது கட்டளைப்படி, சோதிடம் வல்லார் பட்டாபிஷேகத்திற்காக ஒரு நல்ல முகூர்த்தத்தைக் குறிப்பிட்டனர். பட்டாபிஷேகச் செய்தி நகரமுழுவதும் அறிவிக்கப்பட்டது. நகரமாந்தர் நகரத்தைச் சிறப்புமிக அலங்காரம் செய்தனர். அரசாங்க வேலைக்காரர்கள் பட்டாபிஷேகத்திற்கு வேண்டிய பொருள்களைச் சேர்க்கலானார்கள்.

பரதனுக்குத் தாயாகிய கைகேயியிடம் மந்தரை என்ற கூனி ஒருத்தி வேலைக்காரியாக இருந்தாள். இராமருக்குப் பட்டாபிஷேகம் என்ற செய்தி அந்தக் கூனிக்குத்தெரிந்தது. இராமர் அரசராதலை அவள் விரும்பவில்லை. அவள், தன் எஜமானியான கைகேயியின் புதல்வனாகிய பரதன் அரசனாக வேண்டுமென்று விரும்பினாள். அதனால், அவள் கைகேயியிடம் சென்று இராமருக்குப் பட்டாபிஷேகம் என்ற செய்தியைச் சொன்னாள். அதனைக்கேட்ட கைகேயி அளவிடமுடியாத மகிழ்ச்சி அடைந்து, அவளுக்கு விலையுயர்ந்த ஒரு மணிமாலையைப் பரிசாக அளித்தாள். கூனிக்குக் கோபமும் துக்கமும் உண்டாயின.

கொடிய நெஞ்சினளாகிய கூனி, கைகேயியை நோக்கி, "இராமருக்குப் பட்டம் சூட்டினால் பரதனுக்கும் உனக்கும் பலவிதத் துன்பங்கள் உண்டாகும்" என்று சொல்லி, அவள் மனத்தை வேறுபடுத்தினாள்; பல காரணங்களை எடுத்துக்கூறி அவள் மனத்தைக் கலக்கித் தனக்கு இணங்கும்படி செய்தாள். கைகேயியின் மாசற்ற அன்புமிக்க மனம்

கூனியின் துர்ப்போதனையினால் மாறிவிட்டது. 'கரைப்பார் கரைத்தால் கல்லும்கரையும்' என்பது பழமொழியன்றோ!

ஊழ்வினைப் பயனால் கூனியின் தீயசொற்களுக்கு இணங்கிய கைகேயி, அவள் கூறியவாறு, தசரதர் வருகையை எதிர்பார்த்து, ஓர் இருட்டறையிலே தலைவிரிகோலமாகப் படுத்துக்கொண்டாள்.

தசரதர், இராமபட்டாபிஷேகச் செய்தியைச் சொல்லக் கைகேயியின் அந்தப்புரத்திற்கு வந்தார்; அவள் கோபங்கொண்டிருப்பதைக் கண்டு, அக்கோபந்தணியப் பலவிதத் தேறுதல் கூறினார். அவர் எவ்வளவு தேறுதல் கூறியும் தணியாத அவளுடைய வெகுளி, 'பரதனுக்குப் பட்டங்கட்டுதல், இராமர் பதினான்கு வருஷம் காட்டில் வசித்தல்' என்ற இருவரங்களைப் பெற்றதால் தணிந்தது. அவள், உடனே, தன் இருப்பிடம் நோக்கி வந்துகொண்டிருந்த இராமரின் எதிரே தானே சென்று, தான் பெற்ற வரங்களிரண்டையும், 'இவை அரசரிட்ட கட்டளைகள்' என்று கூறினாள். இராமர், தமக்கிடப்பட்ட வனம் புகுதலாகிய கட்டளையைத் தலைவணங்கி ஏற்றுச் சீதாபிராட்டியும் இலட்சுமணனும் தம்மைப் பின்பற்றிவர அயோத்தியைவிட்டுப் புறப்பட்டார்; கங்கைக் கரையை அடைந்து குகன் என்னும் வேடனுடைய நட்பைப் பெற்றுக் கங்கையைக் கடந்து சித்திரகூட மலையை அடைந்தார். இராமர் வனத்திற்குச் சென்ற செய்தி தெரிந்தவுடனே, தசரதர் உயிர் துறந்தார்.

பிறகு, வசிட்டமாமுனிவர் கட்டளைப்படி, பரதனை அழைக்கச் சென்ற தூதர், கேகயநாட்டை அடைந்து, அவனுறையுளை அணுகித் தம் வரவை வாயில்காப்போரால் அவனுக்கு உணர்த்தி, அவனுடைய உத்தரவுபெற்று உட்சென்று, அவனைத் தொழுதனர். அவர் வரவால் மகிழ்ச்சிமிக்க பரதன், அவரைப் பார்த்து, 'சக்கரவர்த்தியார் சௌக்கியமாயிருக்கிறாரா?' என்று வினவ, அவர், 'ஆம்' என்றனர். பின்பு, 'இணைபிரியாத இலட்சுமணனோடு இராமபிரான் இனிது வாழ்கின்றனரா?' என்று கேட்க, அவர், 'அப்படியே' என்றனர். எனவே, பரதன் தனது நீண்ட கைகளைச் சிரத்தின்மேலே கூப்பித் திக்கு நோக்கித் தொழுதான்.

தூதர், உடனே, அயோத்திக்கு வரவேண்டுமென்று பரதனை அழைக்க, அவன், பாட்டனார் முதலானவர்களிடம் விடைபெற்றுக்கொண்டு, தன் நிழல் போன்றுள்ள சத்துருக்கனனுடன் அந்தக் கேகய நாட்டைவிட்டுப் புறப்பட்டுக் கோசல நாட்டை அணுகினன்; தன் நாட்டிலுள்ள உயர்திணையும் அஃறிணையுமாகிய பொருள்களனைத்தும் பொலிவற்றிருத்தலைப் பார்த்துக்கொண்டே வந்தான். இப்படி வந்தவன், 'அயோத்தியை அடைந்தவுடன் ஒரு தீங்கைக் கேட்கப் போகிறேன்' என்று கலங்கிப் பெருமூச்சு விடலானன்.

இந்த நிலைமையை அடைந்த பரதன், மிக உயர்ந்த கோபுரவாயில்கள் அமைந்த அயோத்தி

நகரத்தைப் பார்த்தான்; அந்த நகரம் பெரிதும் விளக்கமில்லாது இருப்பதைக் கண்டு, தம்பியைப் பார்த்து, "மன்னர் இருக்கும் மாநகரோ இது!" என்று கவலையுடன் கூறியபடியே தசரதரது அரண் மனையை அடைந்தான்; அங்கே அவரைக் காணமல் ஐயம் மிக்கவனகி நின்ருன். அப்பொழுது, பணிப் பெண் ஒருத்தி அவனெதிரேவந்து வணங்கி, "பெரு மை மிக்கவரே! நும் அன்னையார் நும்மை அழைக் கின்ருர்" என்றனள்.

உடனே, பரதன் தன் தாயிடம் அடைந்து வணங்கி நிற்க, அவள், அவனைத் தன் மனமாரத் தழுவி மகிழ்ந்து, "மகனே! என் தந்தை தாய் தங் கையர் எல்லாரும் தீதில்லாது வாழ்கின்றனரா?" என்று கேட்க, "அங்ஙனமே வாழ்கின்றனர்" என்ருன் பரதன். பிறகு, அவன், "அன்னையீர்! என் தந்தையாரை வணங்க என் மனம் விரைகின் றது. அவர் எங்கே இருக்கிருர்?" என்று வினவி ஞன். உடனே, கைகேயி, "மகனே! உன் தந்தை யார் தேவர் எதிர்கொண்டழைக்கச் சுவர்க்கம் அடைந்தார்; நீ வருந்தாதே" என்ருள்.

அச் சொற்களைக் கேட்ட பரதன், பேரிடி விழுந்த பெருமரம்போல மண்ணிலே விழுந்தான். அவன் நாக்குப் பேசமுடியாமல் தழுதழுத்தது; கண் கள் அருவிபோல நீரைச் சொரிந்தன. அவன் தன் பிதாவை முன்னிலைப்படுத்திப் பலவிதமாகப் புலம்பிக் கதறி அழுது தன்னை மறந்து கிடந்தான்.

இவ்வாறு தரையிலே சோர்ந்து கிடக்கின்ற பரதனைக் கைகேயி தேற்றினாள். அவன், ஒருவாறு தேறி, அவளைப் பார்த்து, "எனக்குத் தந்தை தாய் தலைவன் தமையன் ஆகிய அண்ணல் இராமனே ஆவார்; அவருடைய திருவடிகளை வணங்கினாலன்றி என் மனத்திலுள்ள பெருந்துயர் நீங்காது" என்று கூறினான். கைகேயி, "குழந்தாய்! இராமன், சீதையும் இலட்சுமணனும் பின்தொடரக் காட்டுக்குச் சென்றான்" என்று கொடுஞ்சொற்களைக் கூறினாள்.

அதைக்கேட்ட பரதன், 'இன்னும் என்ன என்ன துன்பச் செய்திகள் கேட்க இருக்கின்றனவோ?' என்று எண்ணிக் கலங்கி, அவளைப் பார்த்து, "இராமர் வனம் புகுவதற்குக் காரணம், ஏதேனும் குற்றஞ் செய்ததா? தெய்வம் சீறியதா? ஊழ்வினைப் பயனா? அவர் வனம் புகுந்தது, தந்தையார் சுவர்க்கம் அடைந்த பின்போ? முன்போ? சொல்லியருளும்" என்றான். உடனே, கைகேயி, "மகனே! இராமன் காட்டுக்குப் போனதற்கு, நீ கூறியவற்றுள் எதுவும் காரணமன்று: அரசர் இருக்கும்போதே அவன் வனம் ஏகினான்" என்றாள். பின்பு, பரதன், "குற்றமற்ற இராமர், தந்தையார் இருக்கும்போதே காட்டிற்குச் சென்றது ஏன்?" என்று வினவினான். அவ்வாறு கேட்ட அவனுக்குக் கைகேயி, "பரத! அரசர் எனக்குக் கொடுத்திருந்த வாக்கின்படி இரண்டு வரங்கள் தரவேண்டுமென்று அவரைக் கேட்டுப் பெற்று, அவற்றுள் ஒன்றால் இராமனைக் காட்டிற்கு அனுப்பினேன்; மற்றொன்

னால் இராஜ்யத்தை உன்னுடையது ஆக்கினேன். அரசர், இராமன் வனஞ்சென்றதைப் பொறுக்க முடியாதவராய் உயிர் நீங்கினார்" என்று விடை கூறினாள்.

இவ்வாறு, ஒருசிறிதும் அன்பில்லாத நெஞ்சையுடைய கைகேயி கூறியவற்றைக் கேட்ட பரதன், சிறிது நேரம் மூர்ச்சையுற்றுக் கிடந்தான்; பிறகு, ஒருவாறு தெளிவுற்று, அவளைப் பார்க்கவும் மனமில்லாதவனாகி, "பாவி! உன்னைத் தாய் என்று எப்படிக் கருதுவது? என் அண்ணனார் கோபங்கொள்வாரோ என்று உன்னைத் தண்டிக்காதிருக்கின்றேன்" என்றான்.

பிறகு, பரதன், கோசலையும் சுமித்திரையுமாகிய தாய்மார் இருக்குமிடத்திற்குச் சென்று அவர்களுடைய பாதாரவிந்தங்களிலே பணிந்து நின்றான்; தான் அரசை அடைய எண்ணங்கொள்ளாதவன் என்று அவர்கள் ஐயந்தீர உணரும்படி பல சபதங்களைக் கூறினான்.

பின்னர், பரதன் வசிட்ட முனிவரை அடைந்து, அவர் காட்டிய முறைகளின்படி தந்தையாருக்குச் செய்ய வேண்டிய ஈமக்கடன்களைச் செய்தான்; அவை முடிந்தவுடன், இராமபிரானைக் கண்டு அழைத்து வருவதற்காக, வசிட்டர், சுமந்திரன், தாய்மார் முதலானவர்களுடன் நால்வகைச் சேனைகளும் புடைசூழக் காட்டிற்குச் செல்லலானான்; கங்கைக் கரையை அடைந்தான்.

அந்தக் கங்கைக் கரைக்குத் தலைவனான குகன், பரதன் சேனையுடன் வருவதைக் கண்டு சந்தேகம் அடைந்தான்; பரதனுடைய சகோதர வாஞ்சையையும் அவன் இராமரிடத்திலே வைத்திருக்கும் அன்பையும் அவன் கொண்டிருந்த தவ வேஷம், திசை நோக்கித் தொழுதல், பேச்சு முதலியவற்றால் உணர்ந்து, "எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பு" என்றான்.

அவன், பரதன் தன் அருகில் வந்தவுடன், அவனை வணங்கி, "வலிமை மிக்க தோளினாய்! இங்கே வந்ததற்குக் காரணம் என்ன?" என்று கேட்க, பரதன், "அன்பு மிக்கவனே! தந்தையார் பெரியோர் முறையிலிருந்து தவறினார். அதனை நீக்க மன்னனை அழைத்துப்போக வந்துள்ளேன்" என்றான். இவ்வாறு பரதன் கூறவே, குகன், 'உத்தம சகோதரன் இவனே; இவனை ஒப்பார் யார்?' என்று தனக்குள் எண்ணி, அவனை நோக்கி,

"தாய்உரை கொண்டு தாதை
உதவிய தரணி தன்னைத்
தீய்வினை என்ன நீத்துச்
சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை என்ற போழ்து
புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேழ்
ஆவரோ தெரியின் அம்மா?"

என்றும், "சூரியன் மற்ற எல்லா ஒளிகளையும் தன் ஒளிக்கு உள்ளாக்கிக் கொள்வது போல, உன் மாபி

ஞோர் ஈட்டிய புகழ்களையெல்லாம் உன் புகழாக்கிக் கொண்டாய்'' என்றும் பொருத்தமான பலவற்றைச் சொல்லி, அவனைப் பெரிதும் பாராட்டி, அவன் கேட்டுக்கொண்டபடி அவனையும் அவனுடன் தொடர்ந்து வந்தவர்களையும் ஓடங்களில் ஏற்றிக் கங்கையின் எதிர்க்கரையிலே சேர்த்தான்.

பிறகு, குகன், இராமர் சித்திரகூடமலையில் எழுந்தருளியிருப்பதைக் கூறி, அவன் பின்சென்று அவனைச் செல்லவிட்டான். சென்ற பரதன், வழி நடுவே பரத்துவாசமுனிவரை வணங்கி, அவர் ஆசி பெற்றுச் சித்திரகூடத்தைக் கிட்டினன். படைகளுடன் வரும் பரதனைக் கண்ட இலட்சுமணன், அவன் போர்செய்ய வருகிறனென்று ஐயுற்று மிக்க சினங் கொண்டு அவனுடன் போர்புரிய எழுந்தான். உடனே, இராமர், அவனைப் பார்த்து, "இலட்சுமணா! நம் குலத்துதித்தவர் குற்றங்களிலிருந்து நீங்கியவர்; இந்தப் பரதன் செய்யுஞ்செயல்களெல்லாம் வேதங்கள் விதித்தவைகளே; வேறானவைகளை அவன் ஒருகாலும் செய்யான்; நீ என்பால் வைத்துள்ள அன்பின் மிகுதியால் அவனுடைய நற்குணங்களை உணர்ந்துகொள்ளவில்லை; அவன் என்னிடம் வைத்திருக்கிற பேரன்பு மிடர் பிடித்துத் தள்ள, இராஜ்யத்தை என்னிடம் ஒப்படைக்க வருகிறனென்று எண்ண வேண்டும்; வேறுவிதமாக எண்ணுதல் அறிவுடைமைக்கு அழகன்று; என்னோடு போர்புரிய அவன் வருகிறனென்று எண்ணுவது தகாது; அவன் என்னைக் காணவே வருகிறன்;

இதன் உண்மையைப் பின்பு காண்பாய்" என்று கூறி, அவனை அடங்கியிருக்கச் செய்தார்.

அப்போது, பரதன், இராமரிருக்கும் இடத்தை அடைந்து அவருடைய பாதங்களிலே விழுந்து கதறினன். இராமர், பரதனை வாரியெடுத்துத் தழுவிக்கொண்டு ஆறுதல் கூறினர்; வசிட்டர் முதலானவர்களை வணங்கி ஆட்சி முறையைப்பற்றிக் கேட்டார்; தந்தையார் உயிர் துறந்த செய்தியைக் கேட்டு மிகத் துன்புற்று விதிப்படி நீர்க்கடன்களைச் செய்தார்.

பின்னர், பரதன், இராமரை அயோத்திக்கு வந்து முடிசூட்டிக்கொண்டு அரசாளுமாறு வேண்டினன். இராமர், பல நீதிகளைக் கூறித் தாம் அயோத்திக்கு வரலாகாது என்றார். பரதன் மீட்டும் பல நியாயங்களைக்கூறி நாட்டிற்கு வருமாறு வற்புறுத்தினன். கடைசியில், அவன் இராமருடைய கட்டளையை மறுத்தற்கு அஞ்சி அவருடைய பாதுகைகளை வேண்டிப் பெற்றுக்கொண்டான்; "அண்ணலே! வனவாசத்திற்குக் குறிப்பிட்ட பதினான்கு வருஷங்கள் முடிந்ததும் நீர் அயோத்தியை அடையாதிருப்பீராளுல், யான் நெருப்பில் விழுந்து இறப்பேன்" என்று இராமரிடம் சொல்லி, அவருடைய சம்மதத்தைப் பெற்றுப் புறப்பட்டான். இவ்வாறு திரும்பி வந்த பரதன் அயோத்திக்கு வெளியே இருக்கும் நந்திக்கிராமம் என்ற இடத்திலேயே தங்கி இராமருடைய பாதுகைகளுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்து, அவற்றின் அடிமை ஆளாக இருந்து நாட்டை

ஆண்டு வரலானான். இப்படியே பதினான்கு ஆண்டு களையும் பரதன் நந்திக்கிராமத்தில் கழித்தான்.



பரதன் இராமருடைய பாதுகைகளைப் பெறுதல்

வனவாசம் முடிந்து மீண்டு வரும்போது, இராமர், பரத்துவாச முனிவர் வேண்டியபடி அவர் ஆச்சிரமத்திலே விருந்து உண்டு வர நேர்ந்தமை யால், குறித்தகாலத்திலே அயோத்தியை அடைய

முடியவில்லை. அதனால், இராமர் பரதனைத் தீக்குளிக் காமல் தடுக்கும்பொருட்டு அனுமானை அவனிடம் முந்தி அனுப்பினார்.

இஃது இவ்வாறாக, நந்திக்கிராமத்தில் பரதன் தனது சபதத்தை நிறைவேற்ற எரிவளர்க்க உத்தர விட்டதை அயோத்தியிலிருந்த கோசலாதேவி அறிந்து, மனம் பதைத்து உருகி, அவனிடம் விரைந் தோடி வந்தாள். அவளைக் கண்ணுற்ற பரதன், அவள் பாதங்களில் விழுந்து வணங்கினான். வணங்கிய பரதனை அவள் வாரியெடுத்து, "என் மகனே! என்ன இது? முன்னே அரசரும் மைந்தனும் செய்தவை விதிவலியால் நடந்தவை; பின்னும், அதனாலேயே பல செய்கைகள் நிகழ்ந் தன; நீ இவ்வாறு எரியில் விழுந்து இறப்பாயானால் நாட்டுமக்களும் மன்னர்களும் சேனைகளும் உன் னைப் பின்பற்றுவார்கள்; நாங்களும் அப்படியே செய்வோம்; தருமமும் அந்தக் கதி அடையும்; உல கம் தன் இயல்பு கெடும்; உன் அருமையைச் சிறி தும் நீ உணர்ந்திலை. ஊழி மாறுபட்டாலும் உன் பெருமை அழியாது. ஐயனே!

'எண் இல் கோடி இராமர்கள் என்னினும்
அண்ணல் நின் அருளுக்கு அருகாவரோ?
புண்ணியம்எனும் நின்உயிர் போயினல்
மண்ணும் வானும் உயிர்களும் வாழுமோ?'

இராமன் இன்று வராமற்போனாலும் நாளைக்கே உன்னிடம் வந்து சேருவான்; அவன் சொல் தவறு

வான் என்று எண்ணுதே" என்பவை ஆதியாகப் பலவற்றைக் கூறி அவனைத் தடுத்தாள்.

உடனே, பரதன், கோசலையை நோக்கி, "பேரன்புடையீர்! 'மைந்தன் என் வார்த்தைகளை மறுக்கின்றான்' என்று எண்ணுகிர்; இராமர் தம் வாக்குப்படி வந்திலர். யான் குற்றம் அற்றவன் என்பதை இறந்து காட்டுவேன்" என்று சொல்லி எரியை அடைந்து அதைப் பூஜிக்கும்பொழுது, தம் தந்தையைக் காட்டிலும் விரைந்துவரும் அனுமான், ஆகாய வீதியில் வரும்போதே, 'வந்தார் ஸ்ரீராமர்; வந்தார் ஸ்ரீராமர்' என்று கூறிக்கொண்டு கீழே இறங்கி, அந்த எரியைத் தம் கையால் அவித்துக் கரியாக்கி, பரதனைத் தீயில் விழாமல் தடுத்தார். அந்தச் சமயத்தில் பரதன் அளவில்லாத ஆனந்தம் அடைந்து, அங்கிருந்த அனைவரையும் வணங்கினன்; தன்னைத் தானே வணங்கிக்கொண்டான்; சகோதர வாஞ்சையால் ஆனந்தக் கூத்தாடினன்; ஸ்ரீராமர் முதலாயினர் புஷ்பக விமானத்தில் வருகின்றதைப் பார்த்தான்.

பிறகு, பரதன் ஸ்ரீராமரை எல்லாருடனும் எதிர்சென்று அழைத்துவந்தான்; அயோத்திக்கு அவரை அழைத்துச்சென்று, சீதாபிராட்டியாருடன் சிம்மாதனத்தில் ஏற்றி, அவருக்கு முடிசூட்டி, அந்த மஹோத்ஸவத்தைக் கண்டு பேரின்பம் அடைந்தான்.

# 14. கொலம்பஸ்

கொலம்பஸ், இத்தாலி தேசத்திலிருக்கும் ஜினேவா என்னும் பட்டணத்தில் கி. பி. 1437-ஆம் ஆண்டில் ஓர் எளிய குடும்பத்திற் பிறந்தவன். அவன் அதிக புத்திசாலியாயிருப்பதை அவனுடைய தந்தை அறிந்து அவனைப் பேவியாக் கல்லூரிக்கு அனுப்பினான். அவ்விடத்தில், அவன், பூகோள சாஸ்திரம், வான சாஸ்திரம், கப்பலோட்டுந்தொழில் முதலியவைகளை மிக்க ஊக்கத்தோடு கற்றான். அக் காலத்தில் மத்தியதரைக்கடல்நாடுகளில் கடல் வியாபாரமும் யுத்தமுமே மேன்மையான தொழில்களாகக் கருதப்பட்டன. ஆகையால், கொலம்பஸ், அனேக நாடுகளில் யுத்தவீரனாகவும் கடல்வீரனாகவும் அமர்ந்து அனுபவத்தையும் புத்தி விசாலத்தையும் அடைந்துவந்தான். சமயம் வாய்த்த பொழுதெல்லாம் கடற்பிரயாணம் செய்து ஆப்பிரிக்காவின் மேற்கிலிருக்கும் கினியா நாட்டிற்கும் வடக்கிலிருக்கும் இங்கிலாந்துக்கும் க்ரீன்லாந்துக்கும் வியாபாரக் கப்பல்களில் போய்வந்துகொண்டிருந்தான்.

கொலம்பஸ் க்ரீன்லாந்தில் இருந்தபொழுது, மேற்கில் ஒரு கண்டமிருப்பதாகவும் சில மாலுமிகள் அக்கண்டத்திற்குப் போய்வந்ததாகவும் கேள்விப் பட்டான். அதுவுமல்லாமல், 'மேற்கிலிருந்து வரும் நீரோட்டங்களில் அடிக்கடி சில தாவரங்களின் பாகங்களும், தரைவாழ் பிராணிகளின் உறுப்புக் களும் மிதந்து வந்தன. ஒரு பெரிய புயலடித்து

ஓய்ந்த பிறகு, அடிமரத்தில் குடையப்பட்டனவும் புதுமாதிரியானவையுமான சில சிறிய படகுகளும் அவற்றுள் சிலவற்றில் ஐரோப்பியர் உருவில் வேறுபட்ட தாமிர நிறமுள்ள மனிதர்களின் சவங்களும் காணப்பட்டன' என்றும் கேள்வியுற்றான்.

இவைகளிலிருந்து, அட்லாண்டிக் மகா சமுத்திரத்தின் மேற்குப் பக்கத்தில் நிலப்பாகம் இருக்க வேண்டுமென்றும் தான் அதைப் போய்ப்பார்க்க வேண்டுமென்றும் நிச்சயித்தான். ஆனால், கப்பல்களையும் ஆட்களையும் சேகரிக்க அவனால் முடியவில்லை. அவனிடம் பொருளும் இல்லை. ஆகையால், அவன் அரசர்களிடம் உதவியை நாடலானான்.

கொலம்பஸ் முதலில் போர்த்துகல் அரசனிடம் போய்த் தனக்குச் சில கப்பல்களும், அவைகளை ஓட்டுவதற்கு வேண்டிய சில மாலுமிகளும், ஏவிய வேலைகளைச்செய்யச் சில மனிதர்களும் கிடைத்தால், தான் இந்தியாவின் கீழைக் கரையைக் கண்டுபிடிப்பதோடு, கிழக்குத் தேசங்களுக்குச் செல்ல ஒரு புதிய வழியைக் காட்டுவதாகவும் சொன்னான்; அபாயமில்லாமலும் அதிகச் செலவில்லாமலும் வியாபாரம் செய்து அதிக இலாபத்தை அடையலாமென்றும் சொன்னான்.

ஆனால், போர்த்துகல் அரசன், அவனுடைய வார்த்தையில் நம்பிக்கை கொள்ளவில்லை. இங்கிலாந்து தேசத்து அரசராகிய ஏழாவது ஹென்றி

என்பவருக்கும் கொலம்பஸ் தன்னுடைய எண்ணங் களைக் கடிதங்கள் மூலமாகத் தெரிவித்தான்; அவை அவ்வரசரிடம் போய்ச் சேரவில்லை. ஒரு பெரிய மனிதனிடமிருந்து ஒரு சிபார்சுக் கடிதம் பெற்று ஸ்பெயின் தேசத்து இஸபெல்லா அரசியாரைப் போய்ப்பார்த்தான். அவ்வரசியார் கொலம்பஸை அன்புடன் வரவேற்றாராணுலும், அவரிடம் இருந் தவர்கள், கொலம்பஸ் கொண்ட நோக்கம் நடை பெறச் சிறிதும் இடமில்லையென்று சொல்லி விட்டார்கள். அதனல், கொலம்பஸ் மிகவும் மனச் சோர்வடைந்தான். இஸபெல்லா அரசியார் அவனைத் தம்முடனேயே வைத்துக்கொண்டு மரியாதையாக நடத்திவந்தார்.

இப்படி ஏழு வருஷகாலஞ் சென்ற பின்பு, அவ்வரசியார், தமக்குக் கொஞ்சம் சௌகரி யம் ஏற்பட்டதும், மூன்று சிறுகப்பல்களைத் தயார் செய்து கொடுத்தார். பிறகு, அவைகளுக்கு வேண் டிய மனிதர்களைச் சேர்ப்பது மிகவும் கஷ்டமாயிருந் தது. யாரும் போகத்துணியாத அட்லாண்டிக் மகாசமுத்திரத்தைக் கடந்து செல்லக்கூடிய தைரிய முள்ளவர்களைக் காண்பது அரிதாயிற்று. ஆறுமாத காலம் மிகவும்கஷ்டப்பட்டு மூயன்றும் நூற்றிருபது பேர்களைச் சேர்ப்பதே சாத்தியமாயிற்று. இஸ பெல்லா அரசியார் கொலம்பஸை அந்தப் படைக் குத் தலைவனக நியமித்து, அவன் புதிய நாடுகளையும் அவைகளுக்குச் செல்லும் புதிய வழிகளையும் கண்டு பிடித்துச் சௌக்கியமாய் வந்து சேர்ந்தால், அவ

னுக்கு ஏராளமான வெகுமானம் கொடுப்பதாகவும் வாக்களித்தார்.

கி. பி. 1492 ஆம் வருஷம் ஆகஸ்டு மாதம் மூன்ருந் தேதி, 'பாலாஸ்' என்னும் துறைமுகத்திலிருந்து மூன்று கப்பல்களும் புறப்பட்டன. அப்பொழுது, அவ்விடத்திலிருந்தவர்கள் எல்லாரும், அக்கப்பல்களிலுள்ளவர்களில் ஒருவரும் திரும்பி வரப்போவதில்லையென்று வருந்தினர்கள். அந்தக் கப்பல்களில் இருந்தவர்களுள் இருவருக்கு அந்தப் பிரயாணத்திற் சேர்ந்துகொள்ள இஷ்டமில்லாததால், அவர்கள் ஒரு கப்பலை ஓடவொட்டாமற் செய்துவிட்டார்கள். மற்றக் கப்பல்களும் அவ்வளவு நீண்ட ஒரு பிரயாணத்துக்குத் தகுதியானவைகளல்லவென்று கொலம்பஸ் தெரிந்துகொண்டான்; அவைகளைப் பழுதுபார்த்துச் சரியானபடி செய்ய, கனரித் தீவுகளுள் ஒன்றில் மூன்று வாரங்கள் தங்கி, அவைகளைச் செப்பனிட்டுக்கொண்டு செப்டம்பர் மாதம் ஆருந்தேதி மறுபடியும் புறப்பட்டான்.

காற்று இவர்களுக்குச் சௌகரியமாயிருந்ததால், சில தினங்கள் கப்பல்கள் முன்னே சென்றுகொண்டிருந்தன. ஆனாலும், அனேக மாலுமிகள் மிக்க அதைரியப்பட்டுக் கண்ணீர் வடித்துக்கொண்டும், மண்டியிட்டுக் கடவுளைத் தோத்திரம் செய்துகொண்டும், காலத்தைப் போக்கிக்கொண்டிருந்தார்கள். தாங்கள் பார்க்கப்போகும் தேசங்களிலுள்ள அதிசயமான தோற்றங்களைப்பற்றியும், அவ்விடத்தில் தாங்கள் அடையப்போகிற செல்வத்தைப்பற்றி

யும் கொலம்பஸ் அவர்களிடம் பேசி அவர்களைத் தேற்றினன்.

நிலமே தென்படாமல் அனேக நாட்கள் கப்பல்கள் முன் சென்றமையால், அவர்கள், எல்லையில்லாக் கடலில் தாங்கள் வழிதவறிப் போய்விட்டதாகவும், அதன் மறுகரைக்குப் போய்ச் சேரப்போவதில்லையென்றும், தங்கள் மனைவிமக்களைப் பார்க்கப்போவதில்லையென்றும், கடலிலேதான் இறக்க நேருமென்றும், இனியும் கப்பலை முன்னே செலுத்திக்கொண்டு போவது அறியாமையாகுமென்றும் சொல்லிக் கலகம் செய்தார்கள். கொலம்பஸ், அவர்களுக்கு நல்ல வார்த்தைகள் சொல்லி, பின்னும் சில நாட்கள் மேற்கே போய்ப் பார்க்கலாமென்றும், கரையைக் காண்பதற்குரிய குறிப்புக்கள் ஒன்றும் புலப்படாவிடில் வந்தவழியே திரும்பிவிடலாமென்றும், அப்படி முயன்ற காரியத்தில் வெற்றிபெருமல், யாரும் பரிகசிப்பதற்குக் காரணமாய் அவமானப்பட்டு உயிரைப் பெரிதென்றெண்ணி ஊருக்குத் திரும்புவதினும் இறப்பதே மேலானதென்றும் சொல்லி, அவர்களுக்குத் தைரியமும் நம்பிக்கையும் உண்டுபண்ணினன்.

சில நாட்களுக்குப் பின்னும் கரை கண்ணுக்குத் தென்படவில்லை. மறுபடியும் கப்பலிலிருந்தவர்கள் முன்மாதிரியே முறையிட ஆரம்பித்தார்கள்; கப்பல்களைத் திருப்பித் தங்களை ஸ்பெயின் தேசத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும்படி கோபத்துடன் வற்புறுத்திச் சொன்னர்கள்.

கொலம்பஸ், அவர்களைப் பயப்பட வேண்டாமென்றும், தங்கள் பிரயாணம் சீக்கிரம் முடிந்துவிடுமென்றும், அந்தப் புதியநாட்டைக் கண்டுபிடித்தால் சிறந்த வெகுமானங்களை அடையலாமென்றும் அவர்களுக்குச் சொன்னான். அவனுடைய வார்த்தைக்கு அவர்கள் சிறிதும் செவிகொடுக்கவில்லை. முடிவில், அவர்கள் பிடிவாதமாகச் சொல்வதைக்கேட்டு, மூன்றே நாட்கள் கப்பல்களை முன்னே செலுத்திக் கொண்டு போவதாகவும் அப்போதும் கரையைக் காணமுடியாவிடில் கட்டாயம் அவர்களிஷ்டப்போல ஸ்பெயினுக்குத் திரும்பிவிடுவதாகவும் கொலம்பஸ் வாக்களித்தான். அவர்கள், தங்களுக்கு உண்மையில் விருப்பமில்லாவிட்டாலும் தலைவனுடைய வார்த்தைக்குக் கீழ்ப்படிய வேண்டுமே என்ற கடமையைப் பெரிதாகக் கருதி அதற்கு ஒப்புக்கொண்டார்கள்.

பிறகு, மூன்றாவது நாள், கரையைவிட்டு அதிக தூரம் பறந்துசெல்லாத சில பறவைகள் ஆகாயத்தில் பறப்பதை அவர்கள் கண்டனர்; ஜலத்தின் நிறமும் மாறித் தோன்றிற்று. பசுமையான சில காய்களோடு கூடியதும் புதிதாக வெட்டப்பட்டதுமான ஒரு கிளை மிதந்து வருவதைக்கண்டு ஒரு மாலுமி அதை எடுத்தான்; புதிதாக வெட்டப்பட்ட ஒரு மரத்துண்டு தண்ணீரில் மிதந்து வருவதையும் அவன் கண்டான். இந்த அடையாளங்களெல்லாம் அவர்களுக்குத் தைரியத்தையும் உற்சாகத்தையும் உண்டுபண்ணின. கொலம்பஸ், கரை அருகிலிருக்க

வேண்டுமென்று எண்ணியதால் கப்பல்கள் கரையில் மோதிவிடுமென்று நினைத்து அன்றிரவு அலைகளுக்கு நங்கூரம் பாய்ச்சும்படி உத்தரவிட்டான். மாலுமிகள், பாய்மரங்களின் மேலேறி நாற்புறங்களிலும் பார்த்துக்கொண்டே இருந்தார்கள். நடு இரவில் வெகு தூரத்துக்கப்பால் விளக்கு வெளிச்சம் ஒன்றைக்கண்டு கொலம்பஸ் அளவிடமுடியாத சந்தோஷங் கொண்டான். சற்று நேரத்திற்கெல்லாம் முன்னால்சென்ற ஒரு கப்பலிலிருந்து "கரை, கரை" என்ற சத்தம் கேட்டது. இதேமாதிரி பல தடவைகள் இந்தச் சத்தம் கேட்டு அவர்கள் ஏமாற்றமடைந்திருந்தபடியால், மற்ற மாலுமிகளுக்கு அந்த வார்த்தையில் நம்பிக்கை ஏற்படவில்லை. மறுநாட்காலையில், ஒரு நீளமுடைய மணல்மேடிட்ட கடற்கரையையும், அங்கே கப்பல்களைக்கண்டு வேடிக்கை பார்க்கவந்த நிர்வாணிகளாயிருந்த நாகரிகமற்ற சில ஜனங்களையும் கப்பலிலிருந்தவர்கள் கண்டார்கள்.

பாலாஸ் துறைமுகத்திலிருந்து புறப்பட்டுப் பத்து வாரங்களான பிறகுதான், அவர்கள் நிலத்தைக் கண்டனர்.

அக்டோபர்மாதம் பன்னிரண்டாந்தேதியாகிய அன்றைத்தினமே, மூன்று கப்பல்களின் தலைவர்களும், அவர்களோடு வந்திருந்த சில கனவான்களும், கொலம்பஸும் ஒரு படகிலேறிக் கரையை அடைந்து, அங்கு ஒரு கழியை நட்டு, அதில் ஸ்பெயின் தேசத்துக் கொடியைக் கட்டிப் பறக்க

விட்டு, அந்தத் தீவு ஸ்பெயின் தேசத்துக்குச் சொந்தமானதென்று சொல்லி, அந்தத் தீவுக்கு, 'ஸான் ஸால்வடார்' என்று பெயரிட்டனன்.

அந்தத் தீவிலுள்ள ஜனங்கள் தாமிர நிறமுள்ளவர்களாயும், அழகான தோற்றமும் உடலும் பெற்றவர்களாயுமிருந்தார்கள். சிலர் உடம்பில் வர்ணங்களைப் பூசிக்கொண்டிருந்தார்கள். ஐரோப்பியர்கள் கரை சேர்ந்தவுடன், அவர்கள் பயந்து ஓடினார்கள். கொலம்பஸ் வெட்டுக் குவளைகளையும் வர்ணமணிகளையும் அவர்களுக்குக் கொடுத்து அவர்களைச் சந்தோஷப்படுத்தினான். அந்தத் தேசவாசிகள் ஒரே மரத்தில் குடையப்பட்ட தங்கள் படகுகளிலேறி அவைகளைத் துடுப்புக்களால் தள்ளிக்கொண்டு ஐரோப்பியக் கப்பலுக்குள் வந்தார்கள். வந்தவர்களில் அநேகர் காதிலும் மூக்கிலும் இடுப்பிலும் கைகால்களிலும் தங்க நகைகளை அணிந்துகொண்டிருப்பதைக் கொலம்பஸ் கண்டான். அவர்கள் காட்டிய சைகைகளைக் கொண்டு, ஒரு தீவில் ஏராளமாகத் தங்கம் இருப்பதாகக் கொலம்பஸ் தெரிந்துகொண்டான்; தான் இந்தியாவின் கிழக்கரையைச் சேர்ந்துவிட்டதாக எண்ணினன். ஆனால், அது இந்தியாவைச் சேர்ந்ததன்று. அமெரிக்காக் கண்டத்தைச் சேர்ந்த தீவேயாகும்.

கொலம்பஸ் தங்கம் இருக்கும் தீவைப் பார்ப்பதற்காக அந்தத் தீவிலிருந்து ஏழு மனிதர்களை வழிகாட்டக் கூட்டிக்கொண்டு தெற்கே புறப்பட்டான். அவன் அநேக தீவுகளுக்கு நடுவில் தன் கப்பல்

களைச் சுற்றிச் சுற்றி விட்டுக்கொண்டு அக்டோபர் மாதம் இருபத்தேழாந்தேதி அந்தத் தீவை அடைந்தான். அந்தத் தீவுக்கு இப்போது, 'க்யூபா' என்று பெயர். 'இதைப்போன்ற அழகான தீவை இவ்வுலகில் ஒருவரும் பார்த்திருக்க மாட்டார்கள்' என்று கொலம்பஸ் தன் குறிப்புப் புத்தகத்தில் எழுதிக்கொண்டான். அவ்விடத்திலிருந்த ஜனங்களைத் 'தங்கம் எங்கே கிடைக்கும்?' என்று கொலம்பஸ் கேட்டதற்கு, அவர்கள் கிழக்கே கையைக்காட்டினார்கள். உடனே, கப்பல்களைக் கிழக்கு நோக்கிச் செலுத்தச் செய்து, இப்போது, 'ஹெய்டி' என்று சொல்லப்படும் தீவை அடைந்தான்; அதற்குச் சிறிய ஸ்பெயின் என்று பெயரிட்டான்.

அவ்விடத்திலிருந்த ஜனங்கள் அழகுள்ளவர்களாயும், திருப்தி அன்பு முதலிய நற்குணங்கள் வாய்ந்தவர்களாயும் இருந்தார்கள். ஒருநாளிரவில் இவனுடைய கப்பல் ஒரு பாறையின்மீது மோதி உடைந்தது. அந்தத் தீவின் அரசனுடைய உதவியால், ஒரு நஷ்டமுமில்லாமல் கொலம்பஸ் எல்லாச் சாமான்களையும் கரைசேர்த்தான். அந்தத் தீவில் மலைகளுக்கு நடுவில் ஒரு பள்ளத்தாக்கு முழுவதும் தங்கம் நிறைந்திருக்கிறதென்று கேள்விப்பட்டான். இது தெரிந்தவுடன், சீக்கிரம் ஸ்பெயினுக்குச் சென்று, புதிய நாடுகளையும் தங்கமிருக்கும் இடங்களையும் தான் கண்டுபிடித்திருப்பதை அரசனிடம் தெரிவிக்கவேண்டுமென்று நினைத்து, அவ்விடத்தில் ஒரு கோட்டையைக் கட்டி; அதில் தன்னுடைய

ஆட்களுள் நாற்பது பேர்களை நிறுத்தி, சுதேச வாசிகளுடன் சமாதானமாகப் பழகும்படி அவர்களுக்குச் சொல்லிவிட்டு, கி. பி. 1493 ஆம் வருஷம் ஜனவரி மாதம் நாலாந் தேதி அந்தத் தீவைவிட்டுக் கொலம்பஸ் ஐரோப்பாவுக்குத் திரும்பினான்.

இந்தப் பிரயாணம் முழுவதும் காற்று பிரதிகூலமாகவே இருந்தது. அடிக்கடி புயல்கள் அடித்து இவர்களுடைய கப்பல்கள் முழுகிப்போகும் போலிருந்தன. அப்படி முழுகிப்போனால், தான் கண்டுபிடித்தவை யெல்லாம் ஒருவருக்கும் பிரயோசனமில்லாமற் போய்விடுமே என்று கொலம்பஸ் நினைத்தான்; அவைகளைக் காகிதத்தில் எழுதி, அக்காகிதத்தை மெழுக்குத் துணியினால் மூடிக்கட்டி, அதை ஒரு சிறிய பிப்பாவில் வைத்து அப்பிப்பாவைக் கடலில் மிதக்கவிட்டான்; இந்தமாதிரி பல தடவைகள் செய்தான்; அவன், புயல்களினால் அதிகக் கஷ்டப்பட்டு, மார்ச்சு மாதம் நாலாந்தேதி, 'டேகஸ் நதி' முகத்துவாரம் சேர்ந்து பதின்மூன்றாந் தேதி பாலாஸ் துறைமுகத்தை அடைந்தான்.

பிறகு, கொலம்பஸ், அரசனும் அரசியாரும் பார்ஸிலோனாவில் இருப்பதாகக் கேள்வியுற்று, அங்கே சென்று அவர்களைக் கண்டான்; தான் கொண்டு வந்த தங்க நகைகளையும், பழங்களையும், பறவைகளையும், சிவப்பு இந்தியர்களையும் அரசனிடங் கொடுத்து, கண்டவைகளையும் கேட்டவைகளையும் அவனிடம் சொன்னான். அரசன் மிகவும் சந்தோஷங்கொண்டு

அவனுக்குப் பல பட்டங்களையும் விருதுகளையும் கொடுத்தான்.

கொலம்பஸ் மறுபடியும் அமெரிக்காவுக்கு மூன்று தடவைகள் போனான். ஒவ்வொரு தடவையிலும் அனேகம் தீவுகளைக் கண்டுபிடித்து அவைகளை ஸ்பெயின் தேசத்தோடு சேர்த்தான்.

சில ஸ்பானியர்கள், அயல் நாட்டானாகிய கொலம்பஸுக்கு ஏற்பட்டுவந்த கீர்த்தியையும் செல்வாக்கையும் கண்டு பொறாமை கொண்டு அவனை வெறுத்தார்கள். அவர்கள் அரசனிடமும் அரசியாரிடமும் அவனைப்பற்றி அனேகம் பொய்களைச் சொன்னார்கள். புதியவனாக அனுப்பப்பட்ட ஒரு கவர்னர், கொலம்பஸின் கைகால்களில் விலங்குகளை மாட்டி அவனை ஸ்பெயினுக்குக் கைதியாக அனுப்பினான். அரசனும் அரசியாரும் அவனை விடுதலை செய்து அவன் இவ்விதம் அவமானப்படுத்தப்பட்டதற்காக மிகவும் வருத்தப்பட்டார்கள். ஆனாலும், அதிகநாள் அவன் சந்தோஷமாயிருக்கவில்லை. கடைசிப் பிரயாணத்திலிருந்து திரும்பி வந்த பிறகு, அவன் அதிகநாள் ஜீவித்திருக்கவுமில்லை; தேக சௌக்கியம் மிகவும் கெட்டு மனவியாகுலமடைந்து மிக்க வறுமையுற்று 1506 ஆம் வருஷத்திலே இறந்தான்.

கொலம்பஸ் தான் இந்தியாவைச் சேர்ந்த தீவுகளைக் கண்டுபிடித்துவிட்டதாகவே நினைத்திருந்தான். அதனாலேயே அவ்விடத்திலிருந்த ஜனங்களுக்கு இந்தியர்களென்றும் அந்தத் தீவுகளுக்கு

இந்தியத்தீவுகளென்றும் பெயரிட்டான். இப்போதும் அந்த ஜனங்கள் இந்தியர்களென்றே வழங்கப்படுகின்றனர். அந்தத் தீவுகள் மேற்கிந்தியத் தீவுகளென்றும் சொல்லப்படுகின்றன. அவன் இந்தியாவைக் கண்டுபிடிக்கப் போனதில், ஒரு புதிய உலகத்தையே கண்டுபிடித்து அழியாப்புகழ் பெற்றான்.

## 15. இராணி சாந்த்பீபி

(முதற்பாகம்)

நீங்கள் தேசாபிமானமுள்ள அனேக அரசர்களைப் பற்றியும் வீரர்களைப்பற்றியும் படித்திருக்கிறீர்கள். இத் தேசாபிமானமும் வீரமும் ஆண்மக்களிடம் நிலைபெற்றிருந்ததோடு பெண்மக்களிடத்திலும் நன்கு அமைந்திருந்தன என்பதை இராணி சாந்த்பீபியின் சரித்திரத்தைப் படிப்பதிலிருந்து செவ்வனே அறிவீர்கள்.

இங்கிலாந்தில் எலிஸபெத்மகாராணி ஆண்டுகொண்டிருந்த காலத்தில், தக்காணத்தில் சாந்த்பீபி அரசுபுரிந்து வந்தாள். அவள் ஆமத் நகரத்திலிருந்த ஹுஸேன் நைஸாம்ஷா என்பவனுடைய மகள்; கி. பி. 1548-ஆம் வருஷத்தில் பிறந்தவள். அவள் சிறுவயதாயிருக்கும்பொழுதே, அவளுடைய தாய் நோய்வாய்ப்பட்டு இறந்தாள். ஹுஸேன் நைஸாம்ஷா சாந்த்பீபியை மிக்க அன்புடன் வளர்த்து வரலானான். அவள் முகம் அவளது அன்னையின் முகம்போன்றிருந்ததால், நைஸாம்ஷா அம்முகத்தை அடிக்கடி நோக்கி, தன் மனைவியின் பிரிவையும் நாள

டைவில் மறந்து ஆறுதல் அடைந்தான். சாந்த்பீபி தன் தந்தையின் அருகிலேயே எப்பொழுதும் இருந்து வந்ததால், இராஜாங்க விஷயங்களையும் முறைகளையும் நன்கறியலானாள். தெய்வபக்தி, உண்மை, நியா



[By permission.]

சாந்த்பீபி

யம் முதலிய நற்குணங்கள் அவள் மனத்தில் பதிந்து இருந்தன. அரசன் வேட்டைக்கும் யுத்தத்திற்கும் போகும்பொழுதும் அவளைத் தன்னுடனே அழைத்

துப்போவது வழக்கமாதலால், போர்முறைகளையும் அவள் அறிந்திருந்தாள். அடிக்கடி வீரச்செயல் களைப் பார்த்துவந்ததால், அவளிடத்தில் வீரத் தன்மையும் தைரியமும் உண்டாயின.

சாந்த்பீபி நெடிய உருவினள்; கம்பீரமான தோற்றமுடையவள்; வன்மைமிக்க உடலினள்; அழகு மிக்கவள். அத்தகையவளை மன்னர் பலர் தத்தம் இராணியாக அடையவிரும்பினர். நைஸாம் ஷாவோ, தன் நாட்டின் நலத்தையே பெரிதாக எண்ணி, பக்கத்து நாடாகிய பீஜப்பூரின் அரசனை அலீ அடில்ஷாவுக்குத் தன் அருந்தவப் புதல்வியை மணஞ்செய்துகொடுக்க விரும்பினன். இப்படிச் செய்வதால் இவ்விருநாட்டினிடையேயுள்ள பகை மையும் நீங்குமென்பது அவன் கருத்து. அதுவு மன்றி, இவ்விரண்டு நாடுகளும் ஒற்றுமையுற்று நட்புத்தன்மை உள்ளனவானல், மொகலாயரை எதிர்ப்பது சாத்தியமாகுமென்றும் அவன் நினைத் தான். அலீ அடில்ஷாவும் இக் கருத்துக் கொண்டவ னதலால், அவனுக்கும் சாந்த்பீபிக்கும் கடிமணம் இனிது நிறைவேறிற்று.

அலீ அடில்ஷா அவளிடம் பேரன்புடையவனு ன். அவளும் தன் கணவனிடம் அதிக அன்பும் ஆர்வமும் உடையவளாயினள். அவள் தன்னுடைய நற்குணங்களாலும் புத்தி யுக்திகளாலும் அலீ அடில் ஷாவையும் அந்த இராஜ்யத்திலிருந்த பிரமுகர்களை யும் நல்வழிக்குக்கொண்டுவந்து, அவர்களைத் தேச நலத்திற்காக உழைக்கச்செய்தாள்; அரசன் மூல

மாய் அனேக சீர்திருத்தங்களைச் செய்வித்து நாட்டை உயர்நிலைக்குக் கொண்டுவந்தாள். அலீ அடில்ஷா போர்புரியப் போக நேருங்காலங்களில், அவளையும் அழைத்துச் செல்வது வழக்கம். அத் தேசத்து அமைச்சர்களும், மற்றப் பிரபுக்களும் அவளிடத்தில் மிக்க மதிப்பும் மரியாதையும் அன்பும் உடையவர்களானார்கள். அப்போது, நாட்டிலே செல்வமும் சிறப்பும் சிறந்தோங்கி விளங்கின. அதைக் கண்ணுற்ற அயல் நாட்டு வேந்தர்களெல் லாரும் பொறாமை கொண்டார்கள். இந்நிலையிலே, அலீ அடில்ஷாவுக்கு நோய்கண்டது. அவனுக்கு மகப்பேறு இல்லாமற் போனதால், அவனுடைய தம்பியின் மகனே அரசுக்கு உரிமையுள்ளவனயிருந் தான். அரசுரிமையுள்ள அவன் சின்னஞ் சிறுவனு யிருந்தானதலால், அலீ அடில்ஷா, உயிர் நீங்குந் தறுவாயில், அச் சிறுவனுக்குப் போதுமான வயது வரும்வரையில் சாந்த்பீபியையே அவனுடைய பிரதி நிதியாய் இருந்து அரசுபுரியும்படி திட்டம்செய்து உயிர் துறந்தான்.

அரசன் இறந்தவுடன், பிரபுக்கள் தங்கள் சுய நலத்தையே பெரிதாகக் கருதித் தாங்கள் நினைத்த படியெல்லாம் நடக்க ஆரம்பித்தார்கள். பீஜப்பூரி லுள்ள பிரபுக்களுக்குள் நான்கு கட்சிகள் ஏற்பட் டன. அக்கட்சிக்காரர்கள் தம்முள் சச்சரவு செய்து கொள்ளலாயினர். பீஜப்பூர் அரசனிடம் பொறாமை கொண்டிருந்த கோல்கொண்டா நாட்டினரும் மற்ற நாட்டினர்களும் ஒன்றுசேர்ந்து படையெடுத்து

வந்து பீஜப்பூரைத் தாக்கினார்கள். உடனே, சாந்த் பீபி பீஜப்பூரிலுள்ள பிரமுகர்களனைவரையும் தன்னிடம் வருவித்து, தமக்குள் ஒற்றுமை இல்லாவிட்டால் பீஜப்பூர் சீக்கிரம் எதிரிகள் வசமாகுமென்றும், பீஜப்பூர் ஜனங்கள் தங்கள் மானம் அழிந்து அடிமைப்பட நேரிடுமென்றும் அவர்களுக்கு எடுத்துச் சொன்னாள். பிறகு, வீரமும் உறுதியுமுள்ள சாந்த்பீபி படைகளைத் திரட்டிக்கொண்டு யுத்தகளத்தில் வந்து தானே முன்னணியில் நின்றாள். அதைப் பார்த்த பிரபுக்களும் தளகர்த்தர்களும் தங்கள் சச்சரவுகளை மறந்து அவளைப் பின்பற்றி யுத்தகளத்திற்கு வந்தார்கள். போர் நிகழுங் காலத்திலே அபாயம் அதிகமாயிருந்த ஒவ்வோரிடத்திலும் அவளே முன்னின்று அஞ்சாநெஞ்சினளாய் யுத்தம்செய்து அனேக எதிரிகளைக்கொன்று, எதிரிகளின் படைகளை முறிய அடித்து ஓடச்செய்தாள். யுத்தம் முடிந்து எதிரிகளால் உண்டாகக்கூடிய அபாயம் நீங்கியவுடன், பீஜப்பூர்ப் பிரபுக்கள் தங்களுக்குள் போராட்டங்களை மறுபடியும் ஆரம்பித்தனர். அப்போது பீஜப்பூர் இளவரசன் அரசாளத்தக்க பருவமடைந்தானதலால், அவன் தானே அரசாளவேண்டுமென்று எண்ணங்கொண்டு, சாந்த்பீபியை இராஜ்யத்தைத் தன்னிடம் விட்டுவிடும்படி கேட்டான். உடனே, சாந்த்பீபி அவனுக்கு முடிசூட்டி இராஜ்யத்தை அவனிடம் ஒப்படைத்தாள்.

அரியாசனம் ஏறிய அவன் நல்வழியில் நடவாமலும், சாந்த்பீபி கூறிய கட்டுரைகளைக் கேளா

மலும் இருந்ததால், அவள் தன் தாயகமாகிய ஆமத் நகருக்குப் போய்விட வேண்டுமென்று எண்ணினாள். அந்தச்சமயத்தில், ஆமத்நகரில் அவளுடைய சகோதரன் இறந்துபோகவே, அவனுக்குப் பின்னால் பட்டத்தை அடையக் கூடியவர்களாயிருந்தவர்கள் முறைதவறி அவ்வரசுரிமையைப் பெற முயன்று உயிரிழந்தார்கள். அப்போது, உள்நாட்டுக் கலகங்கள் உண்டாகவே, குடிமக்கள் பலவகையான இன்னல்களை அடையலாயினர். ஒரு கட்சியார் சாந்த்பீபியின் தமையன் பேரன் பட்டத்துக்கு வர வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து, அவளையும் அவ்விடம் வந்து தங்களுக்கு உதவிசெய்யும்படி வேண்டினார்கள். அவர்கள் வேண்டுகோளுக்கிணங்கிய சாந்த்பீபியும் ஆமத்நகரை அடைந்தாள். உடனே, அவள், தானே இளவரசனின் பிரதிநிதியாக இருந்துகொண்டு, நாட்டில் கலகத்தை அடக்கிக் குழப்பத்தைப் போக்கி அமைதியை உண்டாக்கினாள்; மற்றச் சீர்திருத்தங்களையும் செய்து நாட்டில் வாழ்பவர்களுக்கு மகிழ்ச்சியை விளைவித்தாள்.

## 16. இராணி சாந்த்பீபி

(இரண்டாம் பாகம்)

இன்னும் சிலகாலம் கலகங்கள் ஏற்படாமலிருந்தால், ஆமத் நகரும் பீஜப்பூரைப்போலவே முன்னேற்ற மடைந்திருக்கும். ஆனால், அந்நாட்டுப் பிரபுக்களிற் சிலர், அரச வம்சத்தைச் சேராத ஒரு

வனை அரசனுக்குக் கருதி, மொகலாய சக்கரவர்த்தி யாகிய அக்பரைத் தங்களுக்கு உதவிபுரிய வரும்படி வேண்டினார்கள். தக்காணத்தில் தம் அதிகாரத்தை நிலைநாட்ட எப்போது சமயம் வாய்க்குமென்று காத்திருந்த அக்பரும், ஒரு பெரிய படையுடன் தம் மகன் மூராத் என்பவனை அனுப்பினார். அதை அறிந்த சாந்த்பீபி, உடனே அப் பிரபுக்களைப் பிடித்து விசாரணைசெய்து, குற்றத்தைக் கண்டு பிடித்து அவர்களைக் கொல்வித்ததோடு எதிர் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்யலானாள்.

ஆமத்நகரிலிருந்த பிரபுக்களும், அக்பர் ஜயித்துவிட்டால் தங்களுக்கு உண்டாகக்கூடிய கஷ்டநஷ்டங்களைக் கருதி, தங்கள் விரோதங்களை மறந்து, சாந்த்பீபிக்கு உதவிசெய்ய முன் வந்தார்கள். அக்பர் ஆமத்நகரைப் பிடித்துவிட்டால் தக்காணத்து மற்ற நாடுகளையும் நாளடைவில் கைப்பற்றிவிடுவாரென்று மற்ற நாட்டரசர்களுக்குச் சாந்த்பீபி எடுத்துச்சொல்லியும், அவர்கள் அவள் கூறிய நல்லுரைகளை அலட்சியம் செய்துவிட்டார்கள். சாந்த்பீபி, பக்கத்தரசர்களது உதவியைப் பெறாதவளாகியும், தைரியத்தை விடாமல், பீஜப்பூர் ஆமத்நகர்ப் படைகளைக்கொண்டே மொகலாயர் படையை எதிர்க்கச் சித்தமானாள்; தன் குடிமக்களுக்கும் படைகளுக்கும் ஓர் ஆண்டிற்கு வேண்டிய உணவுப் பொருள்களையும், யுத்த தளவாடங்களையும் சேகரித்துக்கொண்டாள்; கோட்டை கொத்தளங்களைச் சீர் திருத்தி வலுப்படுத்திக் கொண்டாள்.

இந்நிலையில், முராதும் தன் பெரிய படையுடன் வந்து அஹமத்நகரை முற்றுகையிட்டான்; கோட்டை மதிலைப் பீரங்கிகளினால் தாக்கி உடைக்க முயன்றான். மதில் சிறிதளவும் தகர்க்கப்படவில்லை. அவன், கோட்டை மதிலின்மேல் ஏறி, அதனுட் செல்லப் பலதடவைகளில் முயன்றான். சாந்த்பீபியின் படையைச் சார்ந்துள்ள குறிதவறாது அடிக்கும் வில்வீரர்கள் மொகலாயசைனியத்தில் அநேகரைக் கொன்றனர். சாந்த்பீபி, கவசத்தை அணிந்துகொண்டு, ஒருகைவாளுடன் கோட்டை கொத்தளங்களிலே எதிரிகள் தாக்கிய ஒவ்வோரிடத்திற்கும் தானே நேரிற்போய், எல்லாம் சரியாய் இருக்கின்றனவா என்று பார்த்தும், அவ்வவ்விடத்திலிருக்கும் வீரர்களுக்கு உற்சாகத்தையும் தைரியத்தையும் உண்டு பண்ணியும் வந்தாள். அவள் அவ்வாறு செய்ததன் பயனாக மொகலாயர் பல வீரர்களை இழந்ததுமன்றிக் கோட்டையினுள் புகமாட்டாதவருமாயினர்.

இவ்வாறாகவே, மதில்களை உடைத்தோ, ஏறிக் குதித்தோ கோட்டையினுட் புகுதல் முடியாத காரியமென்று அறிந்தவுடன், முராத், மதில்களுக்குக் கீழே சுரங்கங்களைத் தோண்டி, அவைகளை உடைத்தெறிய எண்ணங்கொண்டான்; தானிருக்குமிடத்திலிருந்து தனித்தனிப் போக்குள்ளனவாக மூன்று சுரங்கங்களை மதில்களின் அடிவரையில் தோண்டுவித்து, அவைகளுக்கு அடிப்புறத்தில் வெடிமருந்தை ஏராளமாய் நிரப்பச் செய்தான். அவ்வெடிமருந்தில் நெருப்பிட்டால், அம்மருந்து வெடித்து மதில்களை

உடைத்துத் தள்ளிவிடுமென்றும் பின்பு மொகலாயர்கள் சுலபமாய்க் கோட்டைக்குள் நுழையலாமென்றும் மூராத் கருதினன்.

சாந்த்பீபியும் சுரங்கங்கள் தோண்டப்படுவதையும், அவைகளின் போக்கையும் தன் ஒற்றர்கள்மூலமாய்த் தெரிந்துகொண்டாள். அவளுக்கும் இராணுவத் தந்திரங்கள் நன்கு தெரியுமாதலால், அச்சுரங்கங்களுக்குக் கீழே கோட்டையின் உட்புறத்திலிருந்து சுரங்கங்களைத் தோண்டச்செய்தாள். இப்படித் தோண்டி மூராத் நிரப்பிவைத்திருந்த வெடிமருந்தைப் பெரும்பாலும் அப்புறப்படுத்திவிட்டாள். மூராத் தோண்டுவித்த சுரங்கங்களின் கீழே அவள் தோண்டுவித்த சுரங்கங்கள் இருந்தமையால், அச்சுரங்கங்களில் நிரப்பப்பட்டிருந்த வெடிமருந்து வெடித்தாலும் அதன்வேகம் கீழப்புறத்திலிருக்கும் இலேசான மண்படையைத் தாக்கிக் கீழ் நோக்கிச் செல்லுமேயொழிய மேலேதாக்கிக் கோட்டையின் மதில்களுக்கு ஒரு சிறிதும் கேடு விளைக்காதென்பதை அவள் அறிந்தாள். எதிர்பாராத நிலைமையில் ஏற்படக்கூடிய அபாயத்துக்கும் அஞ்சாமல் சாந்த்பீபி தானே முன்னின்று இரண்டு சுரங்கங்களை மேற்கூறியவாறு பயன்படாமற்செய்துவிட்டாள். மொகலாயர் தோண்டுவித்த மூன்ருவது சுரங்கத்தின் நிலைமை அவளுக்குச் சரியாகத் தெரியவராததால், அவள் உத்தேசமாகத் தோண்டுவித்த எதிர்ச் சுரங்கம் பயன் தராததாய் அமைந்திருந்தது. ஆகையால், அது மாத்திரம் எதிரிகள் நெருப்பிட்ட

போது வெடிக்க, மதிலின் ஒரு பாகத்தில் எண்பது கஜதூரம் இடிந்துவிட்டது. உடனே, மொகலாயப் படைவீரர்கள் அவ்வழியாக நுழைய எண்ணிச் சாந்த்பீபியின் சைனியங்களை உக்கிரமாகத் தாக்கினார்கள். சாந்த்பீபியின் தளகர்த்தர்கள் பயந்து ஓட முயன்றார்கள். சாந்த்பீபி ஒரு கவசத்தை அணிந்து தன் முகமூடியுடன் தன் படைகளுக்கு முன்வந்து பின்வருமாறு பேசலாயினாள்:

"சகோதரர்களே! இவ்வளவு நாட்களாய் எவ்வளவு அஞ்சாநெஞ்சினராய் அமர் புரிந்தீர்கள்? எவ்வளவு இன்னலுற்றீர்கள்? எவ்வளவு பொருள்களைத் தியாகம் செய்தீர்கள்? பகைவர் தங்கள் பலத்தினாலும் வீரத்தினாலும் செய்யமுடியாத காரியத்தைச் சூழ்ச்சியினால் செய்ததற்காக அவர்களுக்கு நாம் தலைவணங்குவதா? நாம் இன்று தோல்வியுறலாம்; நாளை வெற்றிபெறலாம்; அதிருஷ்டம் ஒரேவிதமாக இருப்பதில்லையென்பது உங்களுக்குத் தெரிந்த விஷயமே; மானத்தையும் கௌரவத்தையும் இழந்தபின் பிராணன் எதற்கு? 'ஆறிலும் சாவு நூறிலும் சாவு' என்பதை நீங்கள் கேட்டதில்லையா? உங்களில் யார் எதிரியைச் சரணடைந்து அடிமையாக விரும்புகிறீர்களோ அவர்கள் இப்போதே மொகலாயரிடம் சரணடையப் போகலாம். மானத்தைவிட உயிர்பெரிதென்று கருதுகிறவர்கள் இப்போதே ஓடி உயிர் தப்பலாம்; செல்லுங்கள். உங்கள் எண்ணம் எப்படியிருந்தாலும் சரி; என் எண்ணத்தைக் கூறுவேன்; கேளுங்கள். ஆண்பாலாராகிய

நீங்கள் எல்லாரும் ஓடிப்போனாலும் பெண்பாலாகிய நான் பகைவரைச் சரணடையப் போவதில்லை. மொகலாயர் இவ்விடத்தில் நுழைய முடிந்தால் என்




சாந்த்பீபி மதிலுடைந்த இடத்திலே தன் வாளுடன் வந்து நிற்பது

சவத்தை மிதித்துக்கொண்டுதான் நுழையவேண்டும்" என்று சொல்லி, மதிலுடைந்த இடத்திலே தன் வாளுடன் வந்துநின்றாள்.

இதைக்கண்ட தளகர்த்தர்கள், அவ்விடம் விட்டகல வெட்கி, மனத்தில் தேறுதல் செய்துகொண்டு போர்புரிந்தனர். சாந்த்பீபியின் படைவீரர்களும், தைரியங்கொண்டு மும்முரமாய்ச் சண்டைசெய்து, தங்களைத் தாக்கிய மொகலாயர்களை முன்னேற வொட்டாமல் மறித்து நின்றார்கள். சாந்த்பீபி அபாயம் அதிகமாயிருந்த இடங்களிலெல்லாம் விரைந்துசென்று முன்னின்று வீரர்களை ஊக்கங் கொள்ளச் செய்தனள். அவளுடைய வில்வீரர்கள் ஏராளமாய் அம்புகளை எய்தும், மற்ற வீரர்கள் பீரங்கிகளிலிருந்து குண்டுகளை அளவில்லாமல் சொரிந்தும் பெரிய கற்களையும் பாறைகளையும் எறிந்தும் மொகலாயப் படைகளுக்குப் பெருஞ்சேதத்தை உண்டுபண்ணினர். பீரங்கிக் குண்டுகள் முழுதும் செலவழிந்து போய்விட்டபொழுது, சாந்த்பீபி அரசாங்கத்தின் கையிருப்பான வெள்ளியையும் தங்கத்தையும் உருக்கிக் குண்டுகளாக உபயோகிக்கச் சொன்னாள்; அரண்மனையிலிருந்த நகைகளும் பெரும்பாலும் இவ்விதத்தில் பயன்படுத்தப்பட்டன. தங்கம் வெள்ளி இவைகளாற் செய்யப்பட்ட அணிகலன்களும் உண்கலங்களும் அரியவாகிய பின்னர், பலவகை நாணயங்களும் பீரங்கி ரவைகள் செய்ய உபயோகிக்கப்பட்டன.

அன்று முழுதும் கடும்போர் புரிந்தும், மூராத் கோட்டைக்குள் நுழைய முடியவில்லை. அவன் ஆயிரக்கணக்கான மொகலாய வீரர்களை இழந்தான்; அதைக் கண்டு அன்று யுத்தத்தை நிறுத்தி,

அடுத்தநாள் மறுபடியும் அந்த இடத்தைத் தாக்க உத்தேசித்துப் பின்வாங்கினன். அன்றிரவு முழுவதும், சாந்த்பீபி அந்த இடத்தைவிட்டு அகலவே இல்லை. அதனைக் கண்ட தளகர்த்தர்களும், வீரர்களும், மற்ற ஜனங்களும் அவ்விடத்திலேயே தங்கி, இரவுமுழுதும் வேலைசெய்து கோட்டை மதிலின் இடிந்துபோன சிறுபாகத்தை முன்போலப் பலமாய்க் கட்டிவிட்டார்கள்.

மறுநாட் காலையில், மூராத், உடைத்தெறியப்பட்ட கோட்டை மதிற்பகுதி உறுதியுறச் சீர்திருத்தப் பெற்றிருப்பதைப் பார்த்துப் பிரமித்து மனமுடைந்து தாக்குவதற்குத் தயங்கினன். இதற்குள், பீஜப்பூர் அரசனும் ஒரு பெரும்படையைச் சாந்த்பீபிக்கு உதவிசெய்ய அனுப்பினன். அது ஆமத் நகரை அணுகிற்று.

முன்னும் பின்னும் பகைவர் படைகள் நிற்க, அவற்றின் நடுவிலிருந்துகொண்டு சண்டைசெய்ய மூராதுக்கு இஷ்டமில்லை. அதுவுமன்றி, அவன் படையில் உணவுப்பஞ்சமும் ஏற்பட்டது. ஆகையால், சாந்த்பீபியோடு சமாதானம் செய்துகொள்ள எண்ணி அவன் ஒரு தூதனை அனுப்பினன். சாந்த்பீபியும் அப்பொழுது தான் வெற்றியடைந்திருந்தாலும், தன் வீரர்களும் தளகர்த்தர்களும் சண்டை நின்றவுடன் ஒற்றுமையாயிருக்கமாட்டார்களென்றும், மறுபடியும் சண்டை நடந்தால் தன் கட்சி வெற்றியடைவது நிச்சயமில்லையென்றும் நினைத்துச் சமாதானத்திற்கு உடன்பட்டாள்.

ஆமத்நகரின் வீரர்களெல்லாரும் சாந்த்பீபி யைச் சூழ்ந்துகொண்டு அந்த வெற்றிக்காக அவளைப் போற்றிப் புகழ்ந்து தங்கள் நன்றியறிதலைக் காட்டினார்கள். அப்பொழுது, சாந்த்பீபி, வெற்றி தன்னால் வந்ததன்றென்றும், கடவுளின் அருளால் கிடைத்ததென்றும் பணிவு தோன்றப் பகர்ந்து கடவுளைத் துதித்தாள். ஆனாலும், சாந்த்பீபியினுடைய வீரதீரங்களே அச்சமயத்தில் ஆமத்நகரை மொகலாயர் கைப்பற்ற விடாமற் காப்பாற்றினவென்று நகரவாசிகள் நம்பினர்.

பகைவர் பயம் தீர்ந்தவுடன், ஆமத்நகரப் பிரபுக்கள் தங்கள் போராட்டங்களை மறுபடியும் தொடங்கினர். இந்த நிலைமையிலே நான்கு வருடங்கள் செல்ல, மொகலாயர் திரும்பவும் ஆமத்நகரை முற்றுகையிட்டுத் தாக்கலுற்றனர். அப்போது சாந்த்பீபிக்கு எதிரிகளாகவிருந்த சிலர், தங்கள் வீரர்களை அரண்மனைக்குள் இரகசியமாயனுப்பி அவளைக் கொல்லச்செய்தனர். மொகலாயர்கள் மும்முரமாய்க் கோட்டையைத் தாக்கியபோது, அவர்களை எதிர்ப்பதற்கு வீரமிக்க சாந்த்பீபி உயிரோடு அங்கே இல்லாததால், மொகலாய வீரர்கள் அக்கோட்டையைச் சீக்கிரம் பிடித்து அங்கிருந்த வீரர்களையும் பிரபுக்களையும் வாளுக்கு இரையாக்கினார்கள். இராஜபக்தியும் தேசபக்தியும் அற்றவர்களாய், உண்ட வீட்டுக்கு இரண்டு நினைத்து, சாந்த்பீபியையும் வஞ்சனையாற் கொல்வித்த பிரபுக்களும் அவர்களைச் சார்ந்திருந்த படைவீரர்களும் வெற்றி

யுற்ற மொகலாய வீரர்களின் வாளுக்கிரையானது தீவினைப்பயனே ஆகும்.

சாந்த்பீபியினுடைய தைரியத்தையும் சமயோசித புத்தியையும் விளக்குவனவாயுள்ள பல கதைகள் ஆமத்நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் இன்றும் பேசப்பட்டுவருகின்றன. தக்காணத்தில் அவள் இணையற்ற வீரமங்கையாக இன்றும் கருதப் பட்டுவருகிறாள். அவளைப்போல நாட்டிற்காகப் பெரிதும் உழைத்தவர் எவருமில்லையென்றே சொல்லலாம்.

# 17. இந்தியத்தாயின் இன்மொழிகள்

மக்களே! நான் பாரததேவி. உங்களுடைய நற்றாய். என்னை இந்தியா என்று சிலர் சொல்லுகின்றனர். பாரதம் என்பது எனக்கு உரிய பெயர். அம்முறையில் பாரதமாதா என்று என்னை அழைக்கிறார்கள்.

உலகினர் தாம் பிறந்த நாட்டைத் தமது தாய் நாடாகக் கூறுவர். நீங்கள் என்னிடத்தில் பிறந்து வாழ்கின்றீர்கள். அதனால், நான் உங்களுக்குத் தாயாகிறேன். "தாய்தன்னை அறியாத கன்றில்லை; கன்றுதன்னையாயும் அறியும்" என்று என் அரும் பெறற் புதல்வனாகிய கம்பன் பாடியுள்ளான். யான் உங்களை அறிகின்றேன். நீங்கள் என்னை அறிந்து கொள்ளவில்லை. நீங்கள் இவ்வாறிருப்பது எனக்கு மிக்க கவலையைத் தந்துளது. ஒவ்வொரு தாயும் அவ

சியமான காலங்களில் தன் தன் மக்களுக்கு இன் மொழிகளைக் கூறுவது இயற்கை. அவ்வாறே, நானும் என் மக்களாகிய உங்களுக்கு இன்மொழி கள் சிலவற்றைக் கூற விரும்புகிறேன்.

என் அருமையான மக்களே! நான் காலங்கடந்த பழமை வாய்ந்தவள்; உலகினர் போற்றும் புகழ் படைத்தவள். எனக்கு வடக்கெல்லையாக மலைகளிற் சிறந்த இமயமலையும் மற்ற மூன்று திக்குக்களின் எல்லைகளாகக் கடல்களும் உள்ளன.

முப்பத்தைந்து கோடிக்கு மேற்பட்ட மக்களை யுடையவள் நான். எல்லா மக்களும் இனிது உண்டு உடுத்து உயிர் வாழத்தக்க வசதிகளை இயற்கையில் நான் பெற்றுளேன்.

என்னிடத்திலே பரந்த வெளிகள், செறிந்த காடுகள், செழித்த விளைநிலங்கள் முதலியன எங்கும் வேண்டிய அளவு இருக்கின்றன; கங்கை முதல் தாம்பிரபர்ணி ஈறாக அனேக நதிகள் ஓடுகின்றன; உணவுக்கு வேண்டிய தானியங்களும் உடைகளுக்கு வேண்டிய பருத்தி பட்டு முதலியனவும் நிறைந்திருக் கின்றன; எண்ணிறந்த பலவகைப்பட்ட பிராணி கள் இயங்குகின்றன. ஆடம்பரங்களுக்கும் வேண் டாப் பண்டங்களுக்கும் ஆசை கொள்ளாமலிருந் தால், என் மக்களாகிய நீங்கள் உணவின்றி வாடா மலும், உடையின்றி நலியாமலும், உறைவிடமின்றி அலையாமலும் இருக்கலாம். டாக்கா மஸ்லின் துணி யும் காசிப் பீதாம்பரங்களும் காச்மீர தேசத்துச்

சால்வைகளும் கான்பூரின் தோல்வேலைப் பொருள் களும் என்னிடம் சிறந்து விளங்கிய பொருள்களன் றோ? 'பொன்விளையும்பூமி' 'நெற்களஞ்சியம்' என்ற தொடர்மொழிகள் என்னுடைய செல்வச் சிறப்பைத் தெரிவிக்கவில்லையா?

என்னுடைய சொற்களாகிய வேதோபநிடதங் கள் திருக்குறள் திவ்யப்ரபந்தம் தேவார திருவாசகங் கள் முதலியன உலகினரால் மிகவும் கொண்டாடப் படுகின்றன. கற்போர் மனத்தைக் கவரக்கூடிய கற்பனைவாய்ந்த காப்பியங்களுக்குக் கணக்கு உண் டோ? மருத்துவம், சோதிடம், தத்துவம் முதலிய துறைகளிலே தோன்றிய நூல்களுக்கு அளவு உண் டோ? மக்களே! என்னிடமிருந்து அயல் நாட்டார் கொண்டுபோன நூல்களுக்கும் பொருள்களுக்கும் எல்லையுண்டோ? பிறநாட்டினர் அறிவு விளக்கம் பெறுதற்கு முன்னமேயே நான் இப்படிப்பட்ட உய ரிய நூல்களை இயற்றுவித்த பெருமையை அடைந்த வள். வடமொழியிற் சிறந்த வான்மீகியும் தென் மொழியிற் சிறந்த கம்பனும் மற்றும் பல மொழிகளி லும் வல்லவர்களாகிய புலவர்களும், என்னுடைய மெய்ப்புகழ் எக்காலத்தும் எல்லாருக்கும் வெள்ளி டைமலையென விளங்கும்படி, அரிய தொண்டுபுரிந் திருக்கின்றனர். அவ்வாறே, வேதவியாஸனும், 'எல்லாப் பொருள்களுக்கும் இருப்பிடம்' என்று உலகெல்லாம் போற்றும் மஹாபாரதத்தைச் செய் துள்ளான். அந்த வான்மீகி முதலியவர்களிடம் என் மனம் மிகவும் பற்றியிருக்கிறது.

பழம்பெருமையைச் சொல்லிக்கொள்வதில் பயன் ஒன்றும் இல்லை. அதனால், நான் அதிகம் கூற விரும்பவில்லை. என்னுடைய அதர்வவேதத்திற் சொல்லப்படாத புதிய கருவிகளும் அரிய முறைகளும் உண்டோ? இக்காலத்தில் மிகச் சிறப்பாகக் கூறப் படும் ஆகாயக் கப்பல் முதலியன எனக்குப் புதியன வல்ல. அவையெல்லாம், 'நிரபராதிகளுக்கும் கொலை யைக்கொடுக்கும்; கொலைக்கும் துணை செய்யும்' என்று என்னால் மறைக்கப்பட்டன. நான் கொடையி லும் வீரத்திலும் குறைவுறாதவள்; நடுநிலை தவறாத நீதிக்கும் நியாயத்திற்கும் இருப்பிடமானவள். பல குற்றவாளிகள் தண்டிக்கப்படாமல் தப்பினாலும் பா தகமாகமாட்டாது. ஒரு நிரபராதி தண்டிக்கப்படுவது மகாபாதகமாகும். ஆகலால், இன்றைக்கும் நான் அஹிம்சையையே சிறந்த கொள்கையாகக் கடைப் பிடித்துள்ளேன். நான் விரும்பினால் புதிய புதிய கொலைக்கருவிகளை எளிதிற் செய்துகொள்ள முடி யும். ஆனால், நான் அவற்றை வெறுக்கிறேன்.

குழந்தைகளே! என்னுடைய புகழ் பெருமை களை நீங்கள் மறந்திருக்கிறீர்கள். அவற்றை உங் களுக்கு நினைப்பூட்டுவதற்காக வேற்று நாடுகளி லிருந்து வந்துபோன பல அறிஞர்கள் பற்பல குறிப் புக்களை எழுதி வெளியிட்டிருக்கிறார்கள். என்னிட மிருந்து பிறநாடுகளுக்குக் கப்பல்களிற்சென்ற பண் டங்களால் நான் அடைந்திருக்கும் புகழ் அழியாதது.

என்னிடத்திலுள்ள அழகிய கட்டிடங்களுக்கும் சிற்பம் நிறைந்த ஆலயங்களுக்கும் கணக்கு உண்

டோ? ஆக்ராவிலுள்ள தாஜ்மஹால், மதுரையிலுள்ள திருமலைநாயக்கர் மஹால், வித்தியாரண்ய நகர அரண்மனை கோயில்கள், செஞ்சிக்கோட்டை முதலியனபோன்ற கட்டிடங்கள், கண்டோர் மனத்தைக் கவர்வனவல்லவா? அஜந்தாக்குகை, மஹாபலிபுரக்கோயில் போன்றவற்றைக் கண்டு மயங்காத கலைவல்லுநர் உளரோ? தஞ்சாவூர் திருவலஞ்சுழி ஆவுடையார்கோயிலென வழங்கும் திருப்பெருந்துறைபோன்ற இடங்களிலுள்ள ஆலயங்களின் சிறப்பியல்புகளை வியவாதவர் யாவர்?

அதிகம் கூற விரும்பவில்லை என்று சொல்லிக்கொண்டே அதிகமாகக் கூறிவிட்டேன். ஆனால், சொல்லியவை எல்லாம் உண்மையானவையே. இன்னும் சொல்லவேண்டியன எத்தனையோ பல உள. நீங்கள், உங்களினும் அறிவால் மூத்தவர்களை அடுத்து அவற்றைக் கேட்டுத் தெரிந்துகொள்ளுங்கள். நான் இன்று இவற்றைக்கூற முன்வந்ததற்குரிய முக்கிய காரணத்தை மாத்திரம் கூறி எனது பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

மக்களே! நீங்கள் உங்களுடைய பழம்பெருமைகளை மறந்துவிட்டீர்கள். என்னுடைய மக்களாகிய நீங்கள் உலகினர்முன் சிறந்தமக்களாய்த் திகழவேண்டுமென்பது எனது விருப்பம். எனது விருப்பம் நிறைவேற வேண்டுமாயின், நீங்கள் பழமையை உணர்ந்து ஒற்றுமைப்பட்டு அன்பும் அருளும் நிறைந்தவர்களாகவேண்டும். சோம்பலும் ஆடம்

பரமுமின்றி உண்மையுடன் உழைப்பவர்களாக வேண்டும்.

இங்ஙனம் உழைத்தால் நீங்கள் உலகினர் மெச்சும்படி சுதந்திரத்துடன் உண்டு உடுத்து உயிர் வாழ்ந்து இன்புறுவீர்கள். உங்கள் தாயாகிய எனக்கும் பெருமையை அளித்தவர்களாவீர்கள். அப்படிப்பட்ட சிறந்த அறிவும் ஆற்றலும் உங்களுக்கு உண்டாக எல்லாம்வல்ல இறைவன் இன்னருள் புரிக.

## 18. குசேலர் கண்ணபிரானைக் காணல்

(நாடகம்)

களம் 1.

இடம்:—குசேலர் வீடு.

காலம்:—பிற்பகல்.

பாத்திரங்கள்:—குசேலர், சுசீலை.

[நித்யகர்மாக்களைக் காலத்திற்செய்து, கடவுளைப் பூசித்து, உண்ட பிறகு, கடவுளின் குணங்களை எண்ணி இன்புற்றிருக்கும் குசேலரிடம் அவர் மனைவி சுசீலை வந்து வணங்குகிருள்.]

குசேலர்:—சுசீலா! எம்பெருமான் மங்களங்களைக் கொடுத்தருளுவன்; நீ ஏதோ சொல்ல விரும்பி வந்திருக்கிருய்; பயத்தை விட்டுச் சொல்.

சுசீலை:—நாதா! தாங்கள் எல்லாம் அறிந்தவர்கள். நான் இன்று தங்களிடம் பேச முன்வந்ததைப் பொறுக்க வேண்டுகிறேன். நம் குழந்தைகள் போதுமான உணவு பெருமல் மிகவும் கஷ்டப் படுகிருர்கள். அயலாருடைய குழந்தைகள் உண்ணும் உணவையும், தின்னும் பக்ஷணங் களையும், அணியும் ஆடை ஆபரணங்களையும் நம் குழந்தைகள் பார்க்கும் போதெல்லாம் படும் வேதனையையும் ஏக்கத்தையும் கண்டு என்னல் பொறுக்க முடியவில்லை. என்னல் இவர்களைச் சந்தோஷப்படுத்த முடியவில்லை யே! என்னசெய்வேன்?

குசேலர்:—அவரவர்கள் செய்த வினைகளை அவரவர் களே அனுபவிக்க வேண்டும்; இப்பிள்ளைகள் புண்ணியம் செய்திருந்தால் செல்வர் வீட்டிலே பிறந்திருப்பார்கள். அது கிடக்கட்டும். நாம் நம் மக்களைக் காப்பாற்றுகிறோமென்றே, காப் பாற்ற முடியுமென்றே நீ நினைக்கிருயா?

சுசீலை:—ஆசையற்ற தங்களிடத்தில் அடியேன் பேச அஞ்சுகிறேன். நானே இக்குழந்தைகளை வளர்க்கிறேனென்ருவது வளர்ப்பேனென்ரு வது நினைக்கவில்லை. இம்மக்கள் பசியால் வருந்துவதைப் பார்க்கையில் ஏதோ ஒருவித உணர்ச்சி உண்டாகி, இவர்களைப் பற்றிக் கவலைகொள்ளும்படி என்னை அலைத்துக்கொண் டிருக்கின்றது. எனக்குத் தாங்களே எல்லாம்.

குசேலர்:—அன்புமிக்கவளே! உன் எண்ணம் நன்ருகத் தெரிகிறது. நான் எதற்காகவும் யாவரிடமும் போவதில்லை என்பது உனக்குத் தெரிந்த விஷயம். எவ்வுயிரையும் காக்கிற ஈசன் இருக்கிருன்.

சுசீலை:—நாயகரே! கடவுள் காக்கிருர் என்பது உண்மையே. 'மக்கள் முயற்சியைச் செய்யவேண்டியவர்கள்; கடவுள் பலனை அளிப்பவர்' என்று தாங்கள் கூறியிருக்கிறீர்கள். தாங்கள் ஒரு வகையில் முயற்சி செய்யலாம் என்று எண்ணுகிறேன்.

குசேலர்:—எந்த வகையில்?

சுசீலை:—துவாரகைக்கு இறைவராயிருக்கும் கண்ணபிரான் தங்களுடன் கல்விபயின்றவர் என்றும் தங்களிடம் மிகுந்த அன்புள்ளவர் என்றும் தாங்கள் பலகால் அடியேனிடம் கூறியருளினீர்கள். இப்பொழுது அவரிடம் சென்ருல், நம் மக்கள் படும் துன்பம் தொலைந்துவிடும்.

குசேலர்:—கண்மணி போன்றவளே! கண்ணபிரானிடம் போவதில் எனக்கு விருப்பம் அதிகம் தான். செல்வத்தை விரும்பியா அவரிடம் செல்வது? (யோசிக்கிருர்.) சுசீலா! கண்ணபிரானிடம் நண்ணுவேன். அவரைக் கண்ணாரக்கண்டு மகிழ்ந்து வருவேன். அவர் ஸந்நிதியை வெறுங் கையனுய் அடைவேனே?

[சிலநாள் சென்ற பிறகு சுசீலை ஒருமுடிப்பைக் குசேலரிடம் கொடுக்கிருள்.]

சுசீலை:—ஆருயிர்த் தலைவரே! தாங்கள் நாடோறும் கொண்டுவந்து கொடுத்த புல்லரிசியில் கொஞ்சம் கொஞ்சம் மீதிப்படுத்திச் சேர்ந்தவற்றை நீரில் நனைத்துப் பதமாக வறுத்து வெண்மையான அவல் ஆக்கி, அந்த அவலை இந்த முடிப்பாக்கினேன். இதனை எடுத்துக்கொண்டு தாங்கள் துவாரகாநாதர்பால் போய்த் தரிசித்து வரவேண்டுகிறேன்.

[குசேலர் முடிப்பைப் பெற்றுக்கொண்டு செல்லுகிறார். அவர் காதம் பல நடந்து கடலைக்கடந்து, துவாரகையின் பல வீதிகளையும் தாண்டிப்போய்க் கோட்டைவாயிலை அடைகிறார்.]

## களம் 2.

இடம்:—துவாரகை.

காலம்:—பிற்பகல்.

பாத்திரங்கள்:—குசேலர், வாயில் காப்போர்.

குசேலர்:—வாயில்காவலரே! நான் அவந்தி தேச வாசியாகிய பிராமணன். உங்கள் அரசருடன் இளமையிற் கல்வி கற்றவன். அவரைத் தரிசிக்க விரும்பி வந்திருக்கிறேன். என் வரவை அவருக்குஅறிவித்து, நான் இந்தக் கோட்டைக்குள்ளே போய் அவரைக் காண அனுமதி பெற்றுவர உங்களைக் கேட்டுக்கொள்கிறேன்.

முதற் காவற்காரன்:—ஓய்! கிழவரே! நீராவது எங்கள் அரசருடன் கல்வி கற்றிருப்பதாவது?

மனங்கலங்கிப் பேசுகிறீர். உமது விருப்பம் நிறைவேறாது.

இரண்டாமவன்:—ஐயரே! எங்கள் மன்னர் உம்முடன் கல்விகற்றது உண்மையாக இருக்கலாம். அப்படியிருந்தால், அவராகவே உம்மை விரும்பி அழைத்து வரவேற்பாரே! நீர் எங்கள் இறைவரோடு சேர்ந்து கல்வி கற்றதாக, வறுமை மிகுதியால் மதிமயங்கிப் பேசுகிறீரா? அல்லது சொப்பனங் கண்டீரா?

மூன்றாமவன்:—எங்கள் அரசர் உம்முடன் சேர்ந்து கல்வி கற்றிருக்கலாம். ஆயினும், அந்தக் கால நிலைமை வேறு; இப்போதோ இராஜர்களும் மஹாராஜர்களும் கூட அவரைக் காணச் சமயம் கிடைக்காமல் காத்துக்கொண்டிருக்கிறார்கள். இளம்பருவச் சினேகம் இன்னுமா இருக்கும்? அதிலும், மன்னராய் மண்ணாள்பவரிடத்திலா? எங்கள் அரசரைக் காண்பதற்கு வேண்டிய தகுதிகளும் உம்மிடம் இல்லை; வயது முதிர்ந்த காலத்தில் ஏன் இவ்வளவு தூரம் பிரயாசைப்பட்டு நடந்துவந்தீர்? வந்தவழியே திரும்பிப்போம்.

நாலாமவன்:—(முதல் மூவரையும் பார்த்து) சகோதரர்களே! இந்தப் பெரியவரை நீங்கள் உங்கள் அறியாமையால் அவமதித்துப் பேசுகிறீர்கள். ஏன் இவருடன் நமது அரசர் கல்வி கற்றிருக்கக்கூடாது? கல்விச்சாலையிலே ஏழை பணக்காரர் என்ற வித்தியாசம் இல்லையே? நம் அர

சர் இராஜ்ய காரியங்களிலே ஈடுபட்டிருப்பதால் இவரைத் தாமாகவே வரவழைக்க முடியாமல் இருக்கலாம். ஆசாரமுள்ளவர்கள் நகரவாசத்தை விரும்பார்களென்றும் இவரை இங்கு வருவித்தால் இவருடைய நிஷ்டைக்கு இடையூறு உண்டாகுமென்று நினைத்தும் இவரை வருவிக்காமல் இருக்கலாம். அவர் இவரை வரவழைக்கவில்லை என்பதால் அவமதிக்கலாமா? நம் கண்ணபிரான் இப்பொழுது அரசர்க்கரசராக விளங்குவதால் இவருக்கும் அவருக்கும் ஏற்பட்ட நட்பு நீங்கிவிடுமா? பள்ளிக்கூடச் சினேகம் மிகச் சிறந்ததல்லவா? நம் அரசரைக் காண்பதற்கு வேண்டிய தகுதிகள் இவரிடம் அமைந்திருப்பதுபோல இதுவரையில் இங்கே வந்த வேறு எவரிடத்திலும் அமைந்திருக்கவில்லை. இவர், சத்தியம் தவம் முதலிய நற்குண நற்செய்கைகளால் சிறந்தவரென்பது இவருடைய திருமுகத்தாலும் திருவாய்மொழிகளாலும் செவ்வையாய் விளங்குகிறது. இந்தப் பெரியவரிடம் அபசாரப்படாதீர்கள்.

[குசேலருடைய பாதங்களில் வணங்கி]

ஸ்வாமீ! இதோ, ஒரு நொடிக்குள், எங்கள் பெருமான் ஸந்நிதானத்திற்குப்போய், உங்கள் வருகையை உரைத்து, அனுமதியும் பெற்றுக் கொண்டு வருவேன். இங்கே சற்று இருந்து இளைப்பாறுங்கள்.

[குசேலருக்கு ஓர் ஆசனங்கொடுத்து, கண்ணனிடம் விரைந்து செல்லுகிறான்].

## களம் 3.

இடம்:—கண்ணபிரான் திருமாளிகை.

காலம்:—பிற்பகல்.

பாத்திரங்கள்:—கண்ணன், வாயில் காப்போன், குசேலர்.

வாயில் காப்போன்:—

வாழ்க நின்கழல் வாழ்க நின்கொற்றம் -
வளர்புகழ்ப் பெரும! வணங்கினன் அடியேன்.

[நமஸ்காரம் செய்கிறான்]

கண்ணபிரான்:—

வாயில் காவலா! வந்ததென்? உரைப்பாய்.

வாயில் காப்போன்:—

அவந்தி அந்தணராம் அண்ணலே நின்னுடன்
கலைபல பயின்று கலந்த நட்பினராம்
உன்னைக் காண ஒப்பிலா அன்பினர்
வந்துளார் அரண்மனை வாயிலின் முன்னர்.

கண்ணபிரான்:—

இன்னே அவரை அழைத்திவண் வருவாய்;
விரைந்து செல்லுதி சிறந்த காவல!

வாயில் காப்போன்:—

வாழ்க நின்கழல் வாழ்கநின் கொற்றம் -
வளர்புகழ்ப் பெரும! வணங்கினன் அடியேன்.

[கண்ணன் கட்டளைபெற்ற வாயிலோன்
விரைந்து சென்று குசேலரை
அடைந்து]

வந்தனம், வந்தனம் அந்தணீர்!

குசேலர்:—

கண்ணன் கட்டளை பெற்று வந்துள்ளாய்!

வாயில் காப்போன்:—

ஆம், ஆம்; ஐயா! அதற்கென், பெரியோ ?
உம் வரவு உரைத்தேன் ; உவகை மிக்கனன்
அங்குள பொருள்கள் அனைத்தையும் மறந்தான்
விரைந்துமை அழைத்திட விடுத்தனன் என்னை
வருக பெரியீர் ! கண்ணன் மகிழவே.

குசேலர்:—நல்லவனே ! நீ நலம் மிகப் பெறுவாய்.

[குசேலரும் வாயிலோனும் அந்தப்புரம் போகின்றனர். கண்பிரான் குசேலரை வரவேற்றுப் பல உபசாரங்கள் செய்து, பஞ்சணையில் அமர்த்தி, அவர் பாதங்களை வருடிக்கொண்டே]

கண்ணபிரான்:—வழி நடந்து இளைத்தனவோ உம்மல ரடி இரண்டும்.

குசேலர்:—கோவிந்தா ! உன் கோலமார் உருவைக் கண்ணொளிர் கண்டேன் புண்ணியமூர்த்தி!

கண்ணபிரான்:—நல்ல தவமுடையவரே ! உம் முடைய மனைவி மக்கள் முதலியவர்கள் நல் வாழ்வு வாழ்கின்றனரா ?

குசேலர்:—அப்படியே.

கண்ணபிரான்:—நண்பரே ! இவ்வளவு நாள் கழித்து என்னைப் பார்க்கவந்த நீர் எனக் கென்ன கொண்டுவந்திருக்கிறீர் ? வெறுங்கை யராய் வந்திருக்கமாட்டீர்.

[குசேலர் சும்மா இருக்க, அவற்பொதியைக் கண்ணன் எடுத்து, அவிழ்த்து, அவருக்கு எல்லாச் செல்வங்களும் உண்டாக எண்ணி ஒருபிடி அவலை உண்ணுகிறார்.]

ஆ ஆ! இவ்வளவு சுவை மிகுந்த அவலைக் கொண்டுவந்த நீர், ஏன் என்னிடம் இதுவரை கொடுக்காமல் இருந்தீர்? அவலில் எனக்கு மிகப் பிரியமாயிற்றே. இந்த அவல் மிக இனிமையாய் இருக்கின்றது. என்னுடைய மதனியார் தம் கைத்திறமையால் உண்மை அன்புடன் செய்து தந்தது அல்லவா இது? மனமார உண்டு மகிழ்ந்தேன். அரிய நண்பரே! சாந்திப முனிவரிடம் நாம் இருவரும் வித்தியாப்பியாசப் செய்கையில் நிகழ்ந்த சம்பவங்கள் நினைவிலிருக்கின்றனவா?

குசேலர்:—அடுத்தவரை ஆதரிப்பவனே! புருஷோத்தமனை உன்னுடன் இருந்தபொழுது நடந்தவைகள் என் நெஞ்சைவிட்டு நீங்குவனவா? அவைகள் எப்பொழுதும் என்முன் தோன்றி என்னை மகிழ்விக்கின்றன.

[இருவரும் இரவு நெடுநேரம் வரையில் பலபல பேசிக்கொண்டிருந்தனர்.]

கண்ணபிரான்:—பிராமணச் சிரேஷ்டரே! இராத்திரி அதிக நாழிகை ஆயிற்று. இனிது உறங்குவீராக.

குசேலர்:—அவ்வாறே; நீயும் திருக்கண்வளர்ந்தருள்.

[மறுநாள் காலையில் கண்ணன் குசேலர் விருப்பப்படி அவரை வழி அனுப்பு கிறார்; அவர் கடல்கடந்து, காதம் பல சென்று, தமது இடத்தை அடை கிறார்.]

களம் 4

இடம்:—குசேலருடைய மாளிகை.

காலம்:—பிற்பகல்.

பாத்திரங்கள்:—குசேலர், சுசீலை.

குசேலர்:—வற்றிக்கிடந்த என் உடல் அழகுமிகுந்து விளங்குகின்றது; காது முதலிய அங்கங்களிலே ஆபரணங்கள் பொருந்தி விளங்குகின்றன; பொன்னுடை அரையில் சூழ்ந்திருக்கிறது. நான் வசித்துக்கொண்டிருக்கிற இவ்வனம், இப்போது எழுநிலை மாடங்கள் நிறைந்துள்ள நகராக மாறியிருக்கிறது. இவையெல்லாம் எம்பெருமான் திருவருட் பெருமையால் ஆனவை போலும்.

[நகர மக்கள், சுசீலை, மைந்தர்கள் ஆகியவர்கள் மிக்க அன்புடன் குசேலரை எதிர்கொண்டு உபசரிக்கின்றனர்.]

சுசீலை:—என் ஆருயிர்த்துணைவரே! வாடி வதங்கிக் கிடந்த நம்மக்கள் அளவற்ற மகிழ்ச்சி அடைந்திருக்கிறார்கள்; நம்முடைய சிறு குடிசை சிறந்த மாளிகை ஆயிற்று. காடு கடிநகராய் மாறி

விளங்குகின்றது. இந்தச் செயல்களைக் கண்ட அடியாள், தாங்கள் அன்பர்க்கன்பனும் கண்ணனைத் தரிசித்து வருகிறீர்களென்பதைத் தெளிவாய் அறிந்தேன். கண்ணபிரான் தம்மிடம் வைத்துள்ள கருணையை எப்படிப் பாராட்டுவேன்? தாங்கள் தயைகூர்ந்து திருமாளிகைக்கு எழுந்தருளப் பிரார்த்திக்கிறேன்.

[குசேலர் தம்வீட்டில் பிரவேசிக்கிறார்.]

குசேலர்:—எனது வாழ்க்கைத்துணைவி! கண்ணபிரான் உன் குணங்களைப் பாராட்டியருளினன். அவனருளால் எவ்வளவு செல்வங்களை இப்பொழுது நாம் பெற்றிருக்கிறோம்? பார்! எல்லாம் திருவருட் செயல். அவனில்லாமல் ஓர் அணுவும் அசையாது. ஆனால், இந்தச் செல்வம் உலக இன்பங்களில் ஆழச்செய்து நம்மைப் பலவகைத் துன்பங்களுக்கும் உள்ளாக்கும். இச்செல்வம் செல்வமன்று. எம்பெருமான் திருவடிகளைப் பெறுதலே பெருஞ் செல்வமாகும். ஆதலால், அதனைப் பெறும்பொருட்டு அவனுடைய திருவடிகளை இடையறாது தியானித்துக் கொண்டே நம் வாழ்நாளைப் போக்குவோம். இச்செல்வங்களை நம்வீட்டை நோக்கி வருகிற துறவிகளுக்கும் வறியவர்களுக்கும் உதவுவோம். இந்நிலையில் நம்மை வைத்தருளிய கண்ணன் புகழ்களை நாம் என்றும் மறவாது தியானித்துத் துதித்து வாழ்வோம்.

சுபம்: சுபம்: சுபம்.

செய்யுட்பகுதி

# I. நீதிநெறிவிளக்கம்

1. நீரிற் குமிழி இளமை நிறைசெல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள்—நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று. (1)

2. அறம் பொருள் இன்பமும் வீடும்பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியின் ஊங்கில்லைச்
சிற்றுயிர்க் குற்ற துணை. (2)

3. எத்துணைய ஆயினும் கல்வி இடமறிந் [தும்
துய்த்துணர் வில்லெனின் இல்லாகும்—உய்த்துணர்ந்
சொல்வன்மை இன்றெனின் என்னாம் அஃதுண்டேல்
பொன்மலர் நாற்றம் உடைத்து. (3)

4. கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும் [செய்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யும் உடம்பு. (4)

5. வருந்தித்தாம் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த உய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல். (5)

[னேல்
6. இன்சொல்லன் தாழ்நடையன் ஆயினுமொன் றில்லா
வன்சொல்லின் அல்லது வாய்திறவா—என்சொலினும்
கைத்துடையான் காற்கீழ் ஒதுங்கும் கடல்ஞாலம்
பித்துடைய அல்ல பிற. (6)

7. முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியால்
கல்லும் தகரும் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால். (7)

8. கல்வி உடைமை பொருளுடைமை என்றிரண்டு
செல்வமும் செல்வம் எனப்படும்—இல்லார்
குறையிரந்து தம்முன்னர் நிற்பபோல் தாமும்
தலைவணங்கித் தாழப் பெறின். (8)

9. ஆக்கம் பெரியார் சிறியார் இடைப்பட்ட
மீச்செலவு காணின் நனிதாழ்ப—தூக்கின்
மெலியது மேன்மேல் எழச்செல்லச் செல்ல
வலிதன்றே தாழும் துலைக்கு. (9)

10. தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை அன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை அன்றே நலம். (10)

11. கற்றுப் பிறர்க்குரைத்துத் தாம்நில்லார் வாய்ப்படூஉம்
வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை—சொற்றநீர்
நில்லாத தென்னென்று நாணுறைப்ப நேர்ந்தொருவன்
சொல்லாமே சூழ்ந்து சொலல். (11)

12. கற்பன ஊழற்றார் கல்விக் கழகத்தாங்
கொற்கமின் றாக்கைவாய் அங்காத்தல்—மற்றுத்தம்
வல்லுரு அஞ்சன்மின் என்பவே மாபறவை
புல்லுரு அஞ்சுவ போல். (12)

13. கற்றன கல்லார் செவிமாட்டிக் கையுறாஉம்
குற்றம் தமதே பிறிதன்று—முற்றுணர்ந்தும்
தாமவர் தன்மை உணராதார் தம்முணரா
ஏதிலரை நோவ தெவன். (13)

14. குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையும் தாயும்—அறவோர்க்
கடிகளே தெய்வம் அனைவோர்க்கும் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை. (14)

15. கண்ணிற் சொலிச்செவியின் நோக்கும் இறைமாட்சி
புண்ணியத் தின்பாலதே ஆயினும்—தண்ணளியான்
மன்பதை ஓம்பாதார்க் கென்னாம் வயப்படைமற்
றென்பயக்கும் ஆணல்ல வர்க்கு. (15)

16. குடிகொன் றிறைகொள்ளும் கோமகற்குக் கற்றா
மடிகொன்று பால்கொளலும் மாண்பே—குடியோம்பிக்
கொள்ளுமா கொள்வோர்க்குக் காண்டுமே மாநிதியம்
வெள்ளத்தின் மேலும் பல. (16)

17. இன்று கொளற்பால நாளைக் கொளப்பொறான்
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன். (17)

18. முடிப்ப முடித்துப்பின் பூசுவ பூசி
உடுப்ப உடுத்துண்ப உண்ணா—இடித்திடித்துக்
கட்டுரை கூறில் செவிகொளா கண்விழியா
நெட்டுயிர்ப்போ டுற்ற பிணம். (18)

19. ஒற்றில் தெரியா சிறைப்புறத் தோர்துமெனப்
பொற்றோள் துணையாத் தெரிதந்தும்—குற்றம்
அறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று
முறையிடினும் கேளாமை அன்று. (19)

20. ஏதிலார் யாதும் புகல இறைமகன்
கோதொரீஇக் கொள்கை முதுக்குறைவு—நேர்நின்று
காக்கை வெளிதென்பார் என்சொலார் தாய்க்கொலை
சால்புடைத் தென்பாரும் உண்டு. (20)

21. கள்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ உணர்ச்சிமற் றில்லாகும்—மண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணம் கண்துயில்வ
பேரா பெருமூச் செறிந்து. (21)

22. கண்ணோக் கரும்பா நகைமுகமே நாண்மலரா
இன்மொழியின் வாய்மையே தீங்காயா—வண்மை
பலமா நலங்கனிந்த பண்புடையார் அன்றே
சலியாத கற்ப தரு. (22)

23. தம்முடை ஆற்றலும் மானமும் தோற்றுத்தம்
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
சிறுவரை ஆயினும் மன்ற தமக்காங்
கிறுவரை இல்லை எனின். (23)

24. இகழின் இகழ்ந்தாங் கிறைமகன் ஒன்று
புகழினும் ஒக்கப் புகழ்ப—இகல்மன்னன்
சீர்வழிப் பட்டதே மன்பதைமற் றென்செய்யும்
நீர்வழிப் பட்ட புணை. (24)

25. உறுதி பயப்ப கடைபோகா வேனும்
இறுவரை காறும் முயல்ப—இறுமுயிர்க்கும்
ஆயுள் மருந்தொழுக்கல் தீதன்றால் அல்லனபோல்
ஆவனவும் உண்டு சில. (25)

26. உலையா முயற்சி களைகணா ஊழின்
வலிசிந்தும் வன்மையும் உண்டே—உலகறியப்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலும் கரி. (26)

27. காலம் அறிந்தாங் கிடமறிந்து செய்வினையின்
மூலம் அறிந்து விளைவறிந்து—மேலுந்தாம்
சூழ்வன சூழ்ந்து துணைமை வலிதெரிந்
தாள்வினை ஆளப் படும். (27)

28. சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையார்—நிறைகயத்
தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை நிழல்காண் பரிது. (28)

29. புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறாதல் வேண்டும்—கழிபெரும்
கண்ணோட்டம் செய்யேல் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து. (29)

30. இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியும் மொழியும் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்
சிங்கி குளிர்ந்தும் கொலும். [பொடிப்பச் (30)

31. நல்லா றொழுக்கின் தலைநின்றார் நல்கூர்ந்தும்
அல்லன செய்தற் கொருப்படார்—பல்பொறிய
செங்கட் புலியே றறப்பசித்தும் தின்னாவாம்
பைங்கட் புனத்தபைங் கூழ். (31)

32. வள்ளன்மை இல்லாதான் செல்வத்தின் மற்றையோர்
நல்குரவே போலும் நனிநல்ல—கொன்னே [ன்
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான். (32)

33. ஈகை அரிதெனினும் இன்சொலினும் நல்கூர்தல்
ஓகோ கொடிது கொடிதம்மா—நாகொன்று
தீவினைக் கம்மியனால் வாய்பூட் டிடப்படின்மற்
றுவா இவரென்செய் வார். (33)

34. சொல்வன்மை உண்டெனில் கொன்னே விடுத்தொழி
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம் [தல்
ஆக்கம் கெடுவ துளவெனினும் அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர். (34)

35. மறைவழிப் பட்ட பழிமொழி தெய்வம்
பறைபட வறைந்தாங் கோடிப் பறக்கும்—கழிமுடைப்
புன்புலால் நாற்றம் புறம்பொதிந்து மூடினும்
சென்றுதைக்கும் சேயார் முகத்து. (35)

[குமரகுருபரர்]

# II. திரிகடுகம்

36. தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்
கோளாளன் என்பான் மறவாதான் இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது. (1)

37. உண்பொழுது நீராடி உண்டலும் என்பெறினும்
பால்பற்றிச் சொல்லா விடுதலும்—தோல்வற்றிச்
சாயினும் சான்றாண்மை குன்றாமை யிம்மூன்றும்
தூஉயம் என்பார் தொழில். (2)

38. வெல்வது வேண்டி வெகுண்டுரைக்கு நோன்பிலியும்
இல்லது காமுற் றிருப்பானும்—கல்வி
செவிக்குற்றம் பார்த்திருப் பானுமிம் மூவர்
உமிக்குற்றிக் கைவருந்து வார். (3)

39. வைத்ததனை யின்சொல்லாக் கொள்வானு நெய்பெய்த
சோறென்று கூழை மதிப்பானும்—ஊறிய
கைப்பதனைக் கட்டியென் றுண்பானு மிம்மூவர்
மெய்ப்பொருள் கண்டுவாழ் வார். (4)

40. கண்ணுக் கணிகலம் கண்ணோட்டம் காமுற்ற
பெண்ணுக் கணிகலம் நாணுடைமை—நண்ணும்
மறுமைக் கணிகலம் கல்வியிம் மூன்றும்
குறியுடையார் கண்ணே உள. (5)

[நல்லாதனார்]

## III. அறநெறிச்சாரம்

41. மிறவுரையுங் காமத் துரையு மயங்கிப்
பிறவுரையு மல்கிய ஞாலத்—தறவுரை
கேட்குந் திருவுடை யாரே பிறவியை
நீக்கும் திருவுடை யார். (1)

42. மெய்ம்மை பொறையுடைமை மேன்மை தவமடக்கம்
செம்மையொன் றின்மை துறவுடைமை—நன்மை
திறம்பா விரதம் தரித்தலோ டின்ன
அறம்பத்தும் ஆன்ற குணம். (2)

43. இன்றுளார் இன்றேயும் மாய்வர் அவருடைமை
அன்றே பிறருடைமை யாயிருக்கும்—நின்ற
கருமத்தர் அல்லாத கூற்றின்கீழ் வாழ்வார்
தருமம் தலைநிற்றல் நன்று. (3)

44. திரையவித்து நீராட லாகா வுரைப்பார்
உரையவித் தொன்றுஞ்சொ லில்லை— அரைசராய்ச்
செய்து மறமெனினு மாகா துளவரையால்
செய்தவற்கே யாகுந் திரு. (4)

45. தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானே தான் செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி. (5)

[முனைப்பாடியார்]

# IV. நளவெண்பா

## நளன் தமயந்தியிடம் தூது சென்றது

46. காவற்குடை வேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு
மன்னவனு நேர்ந்தான் மனத்தினால் மற்றதனை
இன்னதென வோரா திசைந்து. (1)

47. செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன்—மங்கைபால்
தூதாக வென்றானத் தோகையைத்தன் ஆகத்தால்
கோதாக வென்றானக் கோ. (2)

[அவன், "தேவர் கோவே! நீ கூறியபடி செய்வேன்; ஆனாலும், அந்த நகரத்து அரண்மனையின் அந்தப்புரத்திலே அதன் காவல்களைக் கடந்து நான் எப்படிப் போவது?" என்றான்.]

48. வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்
போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—யாருமுனைக்
காணார்போய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்
பாணாறுந் தாரானைப் பார்த்து. (3)

49. காவல் கடந்தெங்கள் கன்னிமா டம்புகுந்தாய்
யாவனோ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென்றாள் ஊசற் குழைமீது
வெள்ளவாள் நீர்சோர விட்டு. (4)

[நளன் தமயந்தியை நேரிற் கண்டானாயினும் தான் அவளிடம் கொண்டுள்ள விருப்பத்தைத் தன் அறிவின் மிகுதியால் அடக்கி, அவள் வினவியவற்றிற்கு விடைகளாகத் தான் தேவர்கள் தூதனாய் வந்த விதத்தைச் சொல்லித் தன் நாடு பெயர் முதலியவற்றையும் கூறினான்.]

50. என்னுரையை யாதென் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை - மென்மாலை
சூட்டுவாய் என்றான் தொடையிற்றேன் தும்பிக்கே
ஊட்டுவான் எல்லாம் உரைத்து. (5)

51. இயமரநின் றார்ப்ப இனவளைநின் றேங்க
வயமருதோள் மன்னு வருந்த—சுயம்வரந்தான் [யான்
நின்பொருட்டால் என்று நினைகென்றாள் நீள்குடை
தன்பொருட்டால் நைவாள் தளர்ந்து. (6)

52. போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களும் நீயும்
எழுந்தருள்க என்றாள் எடுத்து. (7)

53. வானவர்கோன் ஏவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்ரா யுதற்றொழுதான்
கண்டார் உவப்பக் கலந்து. (8)

54. விண்ணவர்தம் ஏவலுடன் வீமன் திருமகள்பால் [கின்
நண்ணு புகழ்நளனும் நன்குரைத்த—பெண்ணணங்
வன்மொழியும் தேவர் மனமகிழத் தான்மொழிந்த
மென்மொழியும் சென்றுரைத்தான் மீண்டு. (9)

55. அங்கி அமுதநீர் அம்பூ அணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கையறப்
பெற்றாய் எனவருணன் ஆகண் டலன்தருமன்
மற்றோனும் ஈந்தார் வரம். (10)

## தமயந்தி திருமணம்

56. பூசுரர்தம் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியும் தாமரையும் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையாள் ஆழ்துயரத் தோடு
புலர்ந்ததே அற்றைப் பொழுது. (11)

57. காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாய்ச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணுநின்
றாசலா டுற்றா ளுளம். (12)

58. பூணுங் கழல்களிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து. (13)

59. மின்னார்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்
கன்னியான் ஆகில் கடிமாலை—அன்னந்தான்
சொன்னவனைச் சூட்ட அருளென்றாள் சூழ்விதியின்
மன்னவனைத் தன்மனத்தே வைத்து. (14)

60. கண்ணிமைத்த லாலடிகள் காசினியில் தோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே அன்னாள்
அறிந்தாள் நளன்றன்னை ஆங்கு. (15)

61. விண்ணரசர் எல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலம் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன். (16)

62. திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது. (17)

[பிறகு, வீமராஜன் விரும்பியபடி, நல்ல முகூர்த்தத்திலே தமயந்திக்கும் நளனுக்கும் திருமணம் சிறப்பாக நிறைவேறியது. அந்த நிகழ்ச்சியைக் கண்ணுற்றவர் எல்லோரும் பெருமகிழ்ச்சி அடைந்தனர்.]

[புகழேந்திப் புலவர்]

# V. இராமாயணச் சருக்கம்

63. கம்புவைத் தரித்த கையில்
கார்முகம் தரித்தான் வந்தான்
அம்புயக் கண்ணன் வந்தான்
அன்பருக் கன்பன் வந்தான்
தம்பியர்க் கினியான் வந்தான்
தசரத ராமன் வந்தான்
உம்பருக் கமுதம் முன்னாள்
உதவிய ஒருவன் வந்தான். (1)

64. மனுகுலம் விளங்கத் தோன்றி
வரிசிலை யிளையா னோடும்
முனியொடு போனான் வந்தான்
முப்புரம் எரித்த வில்லி
தனுவினை யிறுத்துச் சீதை
தனைக்கரம் பிடித்தான் வந்தான்
அனையவ ளுடனே மீண்டும்
அயோத்தியி லடைந்தான் வந்தான். (2)

65. தாயுரை தலைமேற் கொண்டு
தையலை யுடனே கொண்டு
தீயவெங் கானஞ் சேர்ந்த
செருவலி வில்லி வந்தான்
தூயமா முனிவன் முன்பு
தோன்றிய தூயோன் வந்தான்
மாயமா ரீசன் மாள
வரிசிலை வளைத்தோன் வந்தான். (3)

69\. அரியணை யநுமன் றாங்க
அங்கதன் உடைவா ளேந்தப்
பரதன் வெண்குடை கவிக்க
இருவரும் கவரி வீச
விரைசெறி கமலத் தாள்சேர்
வெண்ணெயூர்ச் சடையன் றன்ன
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.

[கம்பர்]

## VI. திருவெங்கட சதகம்

புருஷராய்ப் பிறந்தோர் பெறுபயன்

70\. புருஷராய்ச் சனனமெடுக்கபேர் மெய்ஞ்ஞான
போதத்தை யறிவதொன்று
பூமியொடு மிக்கதன வானவ தொன்றலது
பூவலஞ் செய்வதொன்று
தருமவா னென்றுமிகு கீர்த்திமா னென்றுநற்
சற்குண விவேகியொன்று
சகலரும் புகழ்கின்ற வித்துவா னென்றுரண
சங்க்ராம வீர னென்று
கருணைசே ரிந்தவகை யில்லாத மனிதரைக்
காசினியி லேன்படைத்தாய்
கருதுதா யுதரமும் பார்க்கின்ற பேர்களிரு
கண்களுஞ் செய்த வினையோ
மருவுலா வியதுளப மாலணி மார்பனே
மணவாள நாராயணன்
மனதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
வரத வேங்கட ராயனே. (1)

சாதிமுதலானவைகளின் குணமே சிறந்ததெனல்

71. தடவரை யதன்மீது விளையினுஞ் சோளமது
 சன்னசம் பாவாகுமோ
சந்ததமும் வாடா திருந்தாலு மெட்டிமலர்
 சாதிமல் லிகையாகுமோ
கடலெலா நிறைவெள்ள மாயினுஞ் சுவைபெற்ற
 காவிரியி னாற்றாகுமோ
காகங்கள் கோடியொலி செய்தாலு மொருசிறு
 கருங்குயிற் றொனியாகுமோ
படர்கின்ற பேய்ச்சுரை சொரிந்தபழ முந்திரிப்
 பழமதற் கிணையாகுமோ
பகர்கின்ற சாதியுங் கனவயது மேன்மையும்
 பல்கூட்ட முந்தேகமார்
வடிவதிக மன்றுகுண மேயதிக மென்பர்காண்
 மணவாள நாராயணன்
மணதிலுறை யலர்மேலு மங்கைமண வாளனே
 வரத வேங்கடராயனே. (2)

[வெண்மணி நாராயண பாரதியார்]

## VII. சிலேடைச் செய்யுட்கள்

(திருமகளுக்கும் பார்வதிக்கும் சிலேடை)

72. ஆருமலைமகளென் றஞ்சக் கரன்கொளலாற்
பேருலகி லஞ்சம்பு பெற்றவேள்—நேரிலிசைந்
தன்னமெனப் போற்றுகையா லாரியனே! பார்வதியும்
பொன்னவளு மொன்றெனவே போற்று. (1)

(இராமனுக்குங் கிருஷ்ணனுக்குஞ் சிலேடை)

73. அம்மானை வென்றவரா யாதவகு லோத்தமராய்ச்
செம்மா நதிக்குதவி செய்தவராய்ச்—சம்மாமுன்
கானத்து வந்தவராய்க் காசினியில் தோன்றியமால்
ஞானத்தை யீவான் நனி. (2)

[தென்றிருப்பேரை, ஸ்ரீ அனந்த கிருஷ்ணையங்கார்]

# செய்யுட்பகுதி அரும்பதவுரை

## I. நீதிநெறிவிளக்கம்

1. நெடுந்திரை – பெரிய அலைகள்; யாக்கை – சரீரம்; நமரங்காள் – நம்மவர்களே! வழுத்தாதது – துதியாதது; எம்பிரான் – கடவுள்; மன்று – சபை.

2. வீடு – மோக்ஷம்; பயக்கும் – கொடுக்கும்; புறங்கடை – தலைவாயில்; இசை – புகழ்; நாட்டும் – நிலைநிறுத்தும்; கவல் – கவலை; உற்ற உழி – நேரிட்டவிடத்து; ஊங்கு – மிக்கது; சிறுஉயிர் – அற்ப வாழ்நாளையுடைய உயிர்கள்.

3. எத்துணைய ஆயினும் – எவ்வளவினவாயினும்; இடம் அறிந்து – (பொருள்கொள்ளும்) இடமறிந்து; உய்த்துணர்வு – ஆராய்ந்தறிதல்; இல்எனின் – இல்லையாயின்; சொல்வன்மை – வாக்குவன்மை; இன்றெனின் – இல்லையாயின்; என்ஆம் – என்ன பயன் உண்டாகும்? அஃது – அந்த வாக்குவன்மை; பொன்மலர் – பொன்னால் செய்யப்பட்ட பூ; நாற்றம் – மணம்.

4. கலைமகள் – ஸரஸ்வதி; மலரவன் – பிரமன்; வண்தமிழோர் – சிறந்த தமிழ்ப்புலவர்; ஒவ்வான் – ஒப்பாகான்; வெறு உடம்பு – பயனற்ற (பூத)உடம்புகள்; மாய்வன – அழிவன; மாயா – அழியா; இவர் – இத்தமிழ்ப் புலவர்.

5. கற்றன – கற்ற நூற்பொருள்களை; ஓம்பாது – பாதுகாவாமல்; மற்றும் சில – வேறு சில நூல்களையும்; பரிந்து – வருந்தி; கற்பான் – கற்க; கருந்தனம் – மிக்க திரவியம்; கைத்தலத்த – கையில் கிடைத்தவை; உய்த்து – (புறத்தே) கொண்டுபோய்; சொரிதல் – எறிந்துவிடல்; அரிப்பரித்தல் – (மண்ணோடு கலந்து கிடக்கும் பொற்றாள் முதலியவற்றைச் சல்லடையினாலே) அரித்தெடுத்தல்; எய்த்தல் – இளைத்தல்.

6. ஒன்று இல்லானேல் – (பொருள்) சிறிதும் இல்லாதவனாயின்; வன்சொல் – கடுஞ்சொல்; அல்லது – கடுஞ்சொல்

அல்லதாகிய இன்சொல்; வாய்நிறவா—பேசார்; என் சொலினும் — கடுஞ்சொற் சொன்னாலும்; கைத்து உடையான்—செல்வமுடையவன்; ஒதுங்கும்—அடங்கி நடக்கும்; ஞாலம் — பூமியிலுள்ள ஜனங்கள்; பித்து உடைய — மயக்க அறிவுடையவர்கள்; பிறஅல்ல — நல்லறிவுடையவர் அல்லர்.

7. முற்றும் — நூல்கள் எல்லாவற்றையும்; கற்றனம் — கற்றுவிட்டோம்; களியற்க — செருக்குக் கொள்ளா திருக்க வேண்டும்; கல்லும் — மலைகளும்; தகரும் — உடைபடும்; கனங்குழாய் — கனமாகிய காதணியை யுடைய பெண்ணே! கொல் — கொல்லன்; உலை — உலைக்களம்; கூடம் — சம்மட்டி.

8. இல்லார் — (கல்வி, செல்வம்) இல்லாதவர்; குறை இரந்து - (தம்) குறையைச் சொல்லி; நிற்பபோல் — பணிந்து நிற்றல்போல; தாமும் — (அவ்விருவகைச் செல்வமுமுடைய) தாமும்; தலை வணங்கி — தலை குனிந்து; தாழப்பெறின் — பணிந்து நடக்கப் பெற்றால்.

9. ஆக்கம் — இருவகைச் செல்வங்கள்; பெரியார் — பெரிதுடையவர்; சிறியாரிடை — (அச் செல்வங்கள்) குறைந்தவரிடத்து; பட்ட - உண்டாகிய; மீச்செலவு— வரம்புகடந்த நடையை; நனிதாழ்ப — மிகவும் பணிந்து நடப்பர்; தூக்கின — (தராசிலே) தூக்கும் போது; மெலியது — இலேசான பொருளுள்ள தட்டு; மேல் மேல் எழச்செல்லச் செல்ல — அதிகம் உயரும்படி மேலேபோக; வலிதுதாழும் அன்றே — கனமுடைய பொருளுள்ள தட்டு அதிகம் கீழே தாழும் அல்லவா? துலை — தராசு.

10. வியப்பிப்பான் — (யாவரும்) நன்குமதித்தலை விரும்பு பவன்; தன் புகழ்தல் — தானே தன்னைப் புகழ்ந்து கொள்ளுதல்; தீச்சுடர் — தீவிளக்கை; நல் நீர் — தண்ணீர்; வளர்த்தற்று — எரியச் செய்தாற்போலும்; வியவாமை — மதியாமை; வியப்புஆவது — மதிப் பெனப்படுவது; நயவாமை — விரும்பாமை.

11. வாய்ப்படூஉம் — வாயினிடத்து உண்டாகும்; வெறு உரை — பயனில்லாத சொல்; வலி — வலிமை; சொற்ற — (நன்னெறிகளைப்) போதித்த; நில்லாதது — (அந்நெறிகளைக்) கைக்கொண்டொழுகாததற்கு; என் — (காரணம்) யாது? நாண் உறைப்ப — நாணம் அதிகரிக்கும்படி; நேர்ந்து—எதிர் நின்று; சூழ்ந்து—ஆலோசித்து.

12. கற்பன — நூல்களைக் கற்றுணர்வதற்கு; ஊழ் — நல்விதி; கல்விக்கழகத்து — கற்றோர் சபையில்; ஒற்கம் — அடக்கம்; ஊத்தை — அசுத்தம்; அங்காத்தல் — வாய்திறத்தல்; வல் உரு — வலிய வடிவம்; அஞ்சன்மின் — பயப்படாதீர்; என்ப — என்று சொல்லுதலேயாம்; மா — மிருகங்கள்; புல் உரு — புல்லாலான பிரதிமை.

13. கற்றன — கற்ற நூற்பொருள்களை; மாட்டி — புகுத்தி; கைஉறூஉம் — சிறுமை அடைதற்குக் காரணமான; பிறிது — வேறு; ஏதிலரை — பிறரை; நோவது — வருந்துவது; எவன் - யாது கருதி?

14. குலமகள் — நற்குடியிற் பிறந்த பெண்; கொழுநன் — நாயகன்; மன்ற — நிச்சயப்பொருள்தரும் இடைச்சொல்; அறவோர்க்கு — தரும வழியிலிருப்பவருக்கு; அடிகள் — குரு; அனைவோர்க்கும் — எல்லாருக்கும்; இலைமுகப் பைம் பூண் இறை — இலைத்தொழில் அமைந்த முகமுடைய பசிய ஆபரணத்தை அணிந்த அரசன்.

15. கண்ணில் சொ(ல்)லி — கண்ணின்குறிப்பினாலே (செய்ய வேண்டியவற்றை) அறிவித்து; செவியின் நோக்கும் — (அறியக்கூடியவற்றைக்) காதினால் (ஒற்றர் முதலியவர்கள் சொல்வதைக் கேட்டலால்) பார்க்கும்; இறைமாட்சி — அரசியல் மாண்பு; தண் அளியால் — குளிர்ச்சியாகிய அருளோடும்; மன்பதை — மக்கட் பரப்பினை; ஓம்பாதார்க்கு — பாதுகாவாத அரசர்க்கு; வயப்படை — வெற்றியைத் தரும் ஆயுதங்கள்; ஆண் அல்லவர்க்கு — பேடிகளுக்கு.

16. குடிகொன்று — குடிமக்களை வருத்தி; இறை — வரிப்பொருள்; கோமகற்கு — அரசனுக்கு; கன்று ஆ — கன்றையுடைய பசுவின்; கொன்று—நோவுறவருத்தி; மாண்புஎ — நற்செயல் போலவே காணப்படும்; கொள்ளும் ஆ(று) — (வரிகளை) வாங்கவேண்டும் முறையாக; காண்டும்ஏ — கண்டோமே.

17. கொளற்பால — பெற்றுக் கொள்ளத்தக்க வரிகளை; குறை இரப்ப — குறைகளை இரந்து சொல்லிக்கொள்ள; நேர்படான் — எதிர்ப்படான்; ஆவன — (தனக்கு) வேண்டியவற்றை; எயிறு அலைப்பான் — பற்களைக் கடித்துக் கோபங்கொள்வான்; ஆறு அலைக்கும் வேடு- வழிச் செல்வோர் பொருளைப்பறிக்கும் வேடன்;

18. முடிப்ப — முடிக்கப்படுவனவாகிய பூக்கள் முதலியவற்றை; பூசுவ — பூசப்படுவனவாகிய கலவைகளை; இடித்து இடித்து—நெருக்கி நெருக்கி; கட்டுரை—உறுதி வார்த்தைகளை; நெட்டுயிர்ப்போடு — பெருமூச்சோடு.

19. ஒற்றில் — வேவுகாரரால்; தெரியா — நிச்சயித்தறியப் படாத காரியங்களை; சிறைப்புறத்து — ஒதுக்கிடத்திலிருந்து; ஓர்தும் — (நாமே) அறிவோம்; பொன் தோள் — அழகிய தோள்களை; தெரிதந்தும் — ஆராய்ந்தறிந்தும்; அறிவு — துணிவுபெற அறிவது; அரிது — அருமையானது; செங்கோன்மை — அரச நீதி; முறையிடினும்—குறைகளைச் சொல்லிக் கொண்டாலும்.

20. ஏதிலார் — அயலார்; புகல — சொல்லக்கடவர்; இறைமகன் — அரசன்; கோது ஒரீஇ — குற்றமுள்ளவைகளை நீக்கி; முதுக்குறைவு — பேரறிவாளராகிய செய்கை; வெளிது — வெண்ணிறமுடையது; என் சொல்லார் — எந்தப் பொய்யைத்தான் சொல்ல மாட்டார்கள்? சால்பு உடைத்து — குணமுள்ள நற்செயல்; என்பாரும் — என்று கூறுகின்றவர்களும்.

21. கண்கூடு ஆ(க)—பிரத்தியக்ஷமாக; பட்டது — வந்தது; மண்டு எரி—மிகுந்த நெருப்பு; வாய்மடுப்பினும் — (தன்)

வாய்க்குள்ளாகக் கொண்டாலும் ; நாகணம் – பெரும் பாம்புகள் ; கண்டுயில்வ – தூங்கும் ; பேரா – அசையாதனவாய்.

22. கண் நோக்கு – (விரும்பிப் பார்க்கும்) கண்ணினது பார்வை ; அரும்புஆ – அரும்பாகவும் ; நகை–மலர்ந்த; நாள் – புதிய ; இன்மொழியின் வாய்மைஎ – இனிய சொல்லோடு கூடிய உண்மையே ; தீம் – இனிய ; வண்மை – கொடையே ; பலம்ஆ – பழமாகவும் ; சலியாத கற்பதரு – (கொடுத்தலில்) சலிப்பில்லாத கற்பக விருக்ஷம்.

23. ஆற்றலும் – வலிமையையும்; மானமும் – பெருந்தகைமையையும் ; சிறுவரை–ஒரு கணப்பொழுது ; மன்ற– நிச்சயமாக ; இறுவரை – மரணகாலம் ; மானமாவது, தன் நிலைமையில் தாழாமையும் தெய்வத்தால் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமாம்.

24. இகழின்–இகழ்ந்தால் ; இறைமகன்–அரசன் ; ஒக்கப் புகழ்ப – கூடப்புகழ்வார்கள் ; இகல்–வலிய ; சீர்வழி– சிறப்பின் வழியிலே ; புணை–தெப்பம்.

25. பயப்ப – தரும் முயற்சிகள் ; கடைபோகாவேனும் – முடிவு பெறாவிட்டாலும் ; முயல்ப – முயலுவார்கள் ; இறும் உயிர்க்கும் – இறக்கும் எனத் துணியப்பட்ட உயிர்க்கும்; ஆயுள் மருந்து ஒழுக்கல்–சீவனைக் கொடுக்கும் மருந்தை வாயிலே ஒழுகவிடுதல்; அல்லனபோல்– அனுகூலமாகாதனபோலக் காணப்பட்டு ; ஆவனவும்– அனுகூலமாவனவும்.

26. உலையா – கெடாத ; களைகண் ஆ(க) – ஆதாரமாக ; ஊழின்–விதியினது ; வலிசிந்துப–வலிமையை அழிக்கும்; பால் – விதி; தின்று – கெடுத்து; மறலி – யமன்; பால்முனி–பிள்ளையாகிய மார்க்கண்டேயர்; கரி–சாக்ஷி; போலும், அசை.

27. வினை–காரியம்; மூலம்–காரணம்; விளைவு–உண்டாகும் பயன்; சூழ்வன–ஆராயப்படுவனவற்றை; துணைமை– துணையாயிருப்பவர்; ஆள்வினை–முயற்சி.

28. சிறிய—சிறியவை; தேற்றார்—அறியாதவர்; பிழைபாடு—பிழைபடுதலை; கயந்தாழ்—மிகவும் ஆழமாகிய; காண்பு—காணுதல்.

29. புறம்நட்டு—வெளியிலே சிநேகித்து; அகம்வேர்ப்பார்—உள்ளே கோபங்கொண்டிருப்பவருடைய; நஞ்சுப் பகைமை—விஷத்தைப்போன்ற விரோதத்தை; கழி பெரும்—மிகப் பெரிய; கண்ணோட்டம்—தாக்ஷிண்யம்; செய்யேல்—செய்யவேண்டாம்; பொதிந்து—மறைத்து.

30. இனியவர்—அன்புடையவர்; இன்னார்—அன்பில்லாதார்; கனியும்—கனிவுடன் கூறும்; கடுவ—விஷமோ; அனல் கொளுந்தும்—தீயைப்போலச் சுடும்; வெப்பது—வெம்மையுடையது; மெய்பொடிப்ப—உடல் புளகமடைய; சிங்கி—விஷம்.

31. நல்ஆறு—நல்வழி; ஒழுக்கின் தலை—செல்லுதலில்; நின்றார்—நிலைபெற்ற பெரியோர்; அல்லன—பாவச் செயல்களை; ஒருப்படார்—உடன்படமாட்டார்; பொறிய—புள்ளிகளுள்ளன; புலிஏறு—ஆண் புலிகள்; அற—மிக; பைங்கண்புனம்—பசுமையான இடமகன்ற கொல்லை; பைங்கூழ்—பயிர்கள்.

32. வள்ளன்மை—ஈகை; மற்றையோன்—ஈகையுள்ளவன்; கொன்னே—வீணாக; கண்ணறையன்—தாக்ஷிண்யமில்லாதவன்.

33. இன்சொலினும்—இன்சொற்களைக் கூறுவதிலும்; நல்கூர்தல்—இல்லாதவராதல்; நாகொன்று—நாக்கினை உள்ளே அடக்கி; தீவினைக் கம்மியனால்—பாவமாகிய கம்மாளனால்; வாய்—வாயாகிய கதவு; ஆ ஆ—ஐயோ;

34. சொல்வன்மை—(யாவரும் ஏற்றுக்கொள்ளத்தக்க) சொல்லினது வன்மை; கொன்னே—வீணாக; கோறலின்—அழிப்பதினின்றும்; வல்லை—விரைவில்; ஆக்கம்—செல்வம்; அஞ்சுபஒ—பயமடைந்து (அதை) ஒழிவாரோ? (ஒழியார்.)

35. மறை — இரகசியம்; பட்ட — செய்த; பழிமொழி — பழிச்சொற்கள்; ஆங்கு — போல; கழிமுடை — மிக்க தீ நாற்றம்; புன்புலால் — இழிவாகிய மாமிசம்; பொதிந்து — (ஒன்றிற்) போட்டு; நாற்றம் — (அதன் தீ) நாற்றம்; சேயார் — தூரத்திலிருப்பவர்; உதைக்கும் — தாக்கும்.

## II. திரிகடுகம்

[மூன்று காரமான பொருள்கள். அவை சுக்கு, மிளகு, திப்பிலி என்பன. இம்மூன்றனாலும் ஆகிய மருந்து உண்போர்க்கு நோயை நீக்கி நன்மையளிப்பதுபோல, ஒவ்வொரு செய்யுளிலும் மும்மூன்று விஷயங்களைக் கூறும் நூறு செய்யுள்களாலாகிய இந்நூல், படிப்போர்க்கு அறியாமையை நீக்கி நல்லறிவை அளிக்கும் என்பது. உவமை ஆகுபெயர்.]

36. தாளாளன் — முயற்சியுடையவன்; கடன்படா — கடன் வாங்காமல்; வேளாளன் — உபகாரி; கோளாளன் — (பிறர் அறிவித்தவற்றை மறவாமல்) கொள்ளுதலில் வல்லவன்; கேள் — நட்பினர்.

37. பால்பற்றி — ஒரு பக்ஷத்தைப்பற்றி; தோல் — உடம்பு; சாயினும் — இறந்தாலும்; சான்றாண்மை — பல குணங்களாலும் நிறைந்து அவற்றை ஆளும் தன்மை; தூஉயம் — பரிசுத்தியுடையவராயிருக்கிறோம்.

38. நோன்பு இலி — தவமில்லாதவன்; இல்லது — கிடைத்தற்கரிய பொருள்; காமுற்று — ஆசைப்பட்டு; கல்வி — கல்வியை; செவி — செவியினாலே.

39. ஊறிய கைப்பதனை — மிகுந்த கைப்புடையதாகிய ஒரு னைவை; கட்டி — வெல்லம் அல்லது கற்கண்டு; மெய்ப்பொருள் — தத்துவப்பொருள்.

40. அணிகலம் — ஆபரணம்; நாண் — வெட்கம்; மறுமைக்கு — மறுபிறப்பிற்கு; குறியுடையார் — இயற்கையறிவுடையார்.

## III. அறநெறிச்சாரம்

41. மறஉரை—பாவச்சொற்கள்; காமத்துஉரை—ஆசையை வளர்க்கும் பேச்சுக்கள்; மயங்கி—சோர்ந்து; மல்கிய—நிறைந்த; திருவுடையார்—செல்வமுடையவர்.

42. மெய்ம்மை—உண்மை; பொறை—பொறுமை; செம்மை—நடுநிலைமை; ஒன்று இன்மை—(குடும்பத்தில்) அந்தரங்கப்பற்றுவைத்து நில்லாமை; துறவுடைமை—பற்றுக்களைத் துறத்தலையுடைமை; நன்மை—நல்லொழுக்கம்; திறம்பாவிரதம்—(நன்மையினின்றும்) மாறுபடாத நோன்புகள்; தரித்தல்—மேற்கொள்ளுதல்; ஆன்ற—சிறந்த.

43. இன்று உளார்—இன்றைக்கிருப்பவர்; மாய்வர்—இறப்பார்; உடைமை—பொருட் செல்வங்கள்; நின்ற—நிலைபெற்ற; கருமத்தர்—காரியஞ் செய்பவர்; தலைநிற்றல்—சிறந்து நிற்றல்.

44. திரை அவித்து—அலைகளில்லாமற் செய்து; நீர்—கடலில்; ஆடல்—முழுகுதல்; உரைப்பார்—பேசுகின்றவர்களுடைய; ஒன்றும் சொல் இல்லை—சொல்வதற்கெதுவுமில்லை; செய்தும்—செய்வோம்; உளவரையால்—இருக்கிற அளவிற்கேற்க.

45. நட்டான் — சினேகிதன்; மறுமை — மறுபிறவி; இம்மை—இப்பிறப்பு; துய்த்தல்—அனுபவித்தல்; கரி—சாக்ஷி.

## IV. நளவெண்பா

46. காவல்குடைவேந்து—(உயிர்களுக்குக்) காவலாதலையுடைய குடையையுடைய நளராசன்; விண்ணவர்கோன்—தேவராசன்; ஓராது—ஆராயாமல்; இசைந்து—(உடன்படுவேன் என்று) சொல்லி; நேர்ந்தான்—உடன்பட்டான்.

47. தேன்மாலை – மணமமைந்த மாலையை; எங்களில் – எங்களுள் (ஒருவருக்கு); இயல் – நற்குணமுள்ள; வீமன் மங்கைபால் – வீமராசனது புத்திரியினிடத்து; தூது ஆக – தூதனாகச் சென்றுவரக் கடவை; தோகை – மயில்போன்ற தமயந்தி; ஆகம் – மனம்; கோது – சக்கை; கோ – நளராசன்.

48. வார் – நீண்ட; வெஞ்சிலை – கொடியவில்; ஒழிய – அல்லாமல்; வச்சிரத்தால் – வச்சிராயுதத்தால்; மால் வரையை – பெரிய மலைகளை; போர் – சண்டை செய்வதற்குரிய; பொன் – அழகிய; கார் – கரிய; பாண் நாறும் – இசை தோன்றுகிற; தாரானை – மாலை யணிந்த நளராசனை.

49. கன்னிமாடம் – கலியாணப் பருவமுள்ள பெண்கள் இருக்குமிடம்; விஞ்சைக்கு இறைவனே – மந்திரங்களுக்குத் தலைவனே; உள்ள ஆறு – உள்ளபடி; ஊசல் குழை – ஊஞ்சலைப்போல் அசைகின்ற குண்டலங்கள்; வெள்ள – கூர்மையாயுள்ள; வாள்நீர் – வாள்போன்ற கண்ணினது தன்மையாகிய கருமை; சோரவிட்டு – விழும்படிவிட்டு; (அதாவது, கடைக்கண்ணாற் பார்த்து.)

50. இமையவர் – தேவர்கள்; பொன் உலகம் – சுவர்க்கம்; புரவலன் – அரசனாகிய இந்திரன்; தொடையில் – (தனது தோளின்) பூமாலையிலுள்ள; தும்பிக்குஏ – வண்டுகளுக்கே.

51. இயமரம் – வாத்தியங்கள்; ஆர்ப்ப – ஆரவாரிக்கவும்; வளை இனம் – சங்கின் கூட்டம்; நின்று ஏங்க – நிலைத்து ஒலிக்கவும்; வயம் – வெற்றி; வகுத்த – செய்துள்ள; சுயம் வரம் – இராச கன்னிகை தன்னை விரும்பி வந்த அரசர் கூட்டத்தில் ஒருவனைக் கணவனாகத் தானே தெரிந்து வரித்துக் கொள்ளுதல்; நீள்குடையான் – வளர்கின்ற குடையை

யுடைய நளன் ; பொருட்டு – நிமித்தம் ; நைவாள் – வருந்துகின்ற தமயந்தி.

52. போது – தாமரை மலர் ; அரி – செவ்வரிகள் ; பொன் – அழகிய ; ஆதரித்தார் – விரும்பிய அரசர்கள் ; அவையகம் – சபையினிடம் ; சோதி – ஒளி; செழு தரளம் – செழித்த முத்துக்களாலாகிய ; எழுந்தருள்க – வந்தருளக் கடவீர்.

53. வானவர்கோன்–தேவராஜனுடைய ; ஏவல்வழி–கட்டளையின்படி ; வாள் நுதலை–ஒளியமைந்த நெற்றியையுடைய தமயந்தியை ; தேன் முரலும் – வண்டுகள் ஒலிக்கின்ற ; வன் தார்–வளப்பம் பொருந்திய மாலையை அணிந்த ; வச்சிராயுதன் – வச்சிராயுதத்தையுடைய இந்திரனை ; தொழுதான்–பணிந்தான்.

54. திருமகள்–செல்வப் புத்திரி, தமயந்தி ; பெண் அணங்கின்–பெண்களுக்குள் தெய்வத்தையொத்த தமயந்தியினது ; வல்மொழி – உறுதிச்சொற்கள் ; மெல்மொழி–(மனம் இளகப்பேசிய) மெல்லிய சொற்கள் ; உரைத்தான்–(தேவர்களிடம்) சொல்லினன்.

55. அங்கி–நெருப்பு; அமுதம் – அன்னம் ; அம் பூ – அழகியமலர்மாலை; சங்கை அற – சந்தேகமில்லாமல் ; பெற்றுய்–(நிச்சயமாக) அடைவாய் ; ஆகண்டலன்–இந்திரன் ; மற்றோனும்–அக்கினிதேவனும்.

56. பூசுரர்–பூமிக்குத் தேவராகிய பிராமணர் ; கை மலர்–கைகளாகிய பூக்களும்; பூ குமுதம்–அழகிய ஆம்பல் மலர்களும் ; முகிழ்ப்ப–குவியவும் ; காசினியும்–பூமியிலுள்ளவர்களும் ; கண்விழிப்ப – கண் திறக்கவும் ; அலர்ந்த–பரவின ; தேம் கோதையாள் – தேனையுடைய மாலையை அணிந்த தமயந்தியினது; புலர்ந்தது–நீங்கிற்று ; அற்றைப்பொழுது–அன்றைய இராக்காலம்.

57. காவலரை—அரசர்களை; சேடி—தோழி; ஈர் இருவர்—(இந்திரன், அக்கினிதேவன், யமன், வருணன் என்னும்) நால்வர்; வரைந்த—அணியப் பெற்ற; பூங்குழலாள்—அழகிய கூந்தலையுடைய தமயந்தி; காணு—கண்டு; ஊசல் ஆடு உற்றாள்—ஊசலாடுதலைப் பொருந்தினாள்.

58. பொன்கொடியை—தமயந்தியை; கண்டக்கால்—கண்டால்; நாண் உகும்—வெட்கம் கெடும்; (உகும் என்பது எதுகை நோக்கி உக்கும் என்று விரித்தல் விகாரம் பெற்றது); ஏவர்—எவர்.

59. மெய்ம்மரபு—சத்தியத்தையுடைய குலம்; செம்மை—நற்குணங்கள்; கடிமாலை—வாசனை பொருந்திய (சுயம்வர) மாலையை; சொன்னவனை—சொல்லிய அந்த மகாராஜனுக்கு; என்றாள்—என்று வேண்டினாள்; விதியின் மன்னவனை—ஊழினுக்கு இறைவனாகிய கடவுளை; மனத்தே வைத்து—நெஞ்சிலே தியானித்துக்கொண்டு.

60. காசினியில்—பூமியில்; தோய்தல்—படிதல்; வண்ணம்—அழகிய; நறுந்தாமரை—வாசனையுள்ள தாமரைப் பூக்கள்; நல்நுதலே அன்னாள்—நல்ல நெற்றியையுடைய இலக்குமியையே ஒத்தவளாகிய தமயந்தி; ஆங்கு—அங்கேயே.

61. விண்ணரசர்—இந்திரன் முதலியவர்; வெள்கி—வெட்கமுற்று; சுளிக்க—கோபங் கொள்ளவும்; கண் அகல்—இடம் அகன்ற; ஞாலம்—பூமியிலுள்ளவர்கள்; களிகூர—மிக்க களிப்பினையடையவும்; வன்மாலை—வலிய மயக்கத்தை; சூட - கொள்ளவும்; வயம் - வெற்றி; பொன்மாலை - அழகாகிய சுயம்வர மாலையை; பொன் — இலக்குமியை ஒத்த தமயந்தி.

62. திண் - வலிவாகிய; ஒள் - ஒளியையும்; கூரை - கூர்மையையுமுடைய; கோ - சிறந்த; குலமாலை (வீமராஜனது) குலத்துக்குப் பூமாலையை ஒத்த; வேல்கண்ணாள்—வேல் போன்ற கண்களையுடைய தமயந்தியினது.

## V. இராமாயணச் சுருக்கம்

63. கம்பு - சங்கு ; கார்முகம் – கோதண்டமென்னும் வில் ; தரித்தான் - ஏந்தியருளிய இராமபிரான் ; அம்புயக் கண்ணன் - தாமரை மலர்களைப் போன்ற அழகிய கண்களையுடையவன் ; இனியான் – இன்பங்களை யருளுபவன் ; தசரதராமன் – தசரத புத்திரனாகிய இராமன் ; உம்பருக்கு – தேவருக்கு ; முன் நாள் – முற்காலத்திலே ; ஒருவன் – ஒப்பற்றவன்.

64. [illegible] – [illegible] ; தோன்றி – அவதாரம் செய்து ; வரிசிலை இளையான் – கட்டமைந்த வில்லேந்திய தம்பியாகிய இலக்குமணன் ; முனிவொடு – விசுவாமித்திரரோடு ; முப்புரம் எரித்த வில்லி – சிவபெருமான் ; தனுவினை – வில்லை ; இறுத்தது – ஒடித்தது ; கரம் பிடித்தான் – கை பிடித்தவன் ; அனையவள் – அத்தன்மையளாகிய சீதாதேவி.

65. தாய் உரை – கைகேயி (கூறிய 'பதினான்கு வருஷம் காட்டிலே வசித்துவர' என்ற) சொற்களை ; தலைமேல் கொண்டு – பயபக்தியுடன் ஏற்றுக்கொண்டு ; மைதிலியை – சீதாபிராட்டியை ; தீய வெம் கானம் – மிகக் கொடிய வனத்தை ; செருவலி வில்லி – போரிலே வன்மை பெற்ற கோதண்டமென்னும் வில்லையுடையவன் ; தூயமா முனிவன் – அகத்தியர் ; மாயமாரீசன் – வஞ்சகச் செயல்களைச் செய்வதில் அதிசமர்த்தனாகிய மாரீசன்.

66. ஆயிரங் கதிரோன் மைந்தற்கு – சூரியன் மகனாகிய சுக்கிரீவனுக்கு ; இனியனாய் – அன்பனாகி ; எரிசரம் – தீப்போற்சுடும் அம்பை ; துரந்தான் – விடுத்தவன் ; ஆழி – சமுத்திரம் ; தனிசிலை – வளையுங் கோதண்டமாகிய வில்லை ; கோசலை நாடன் – கோசல நாட்டரசன்.

67. குன்றினால் – மலைகளினால் ; ஆழி – சமுத்திரத்திலே ; கட்டி – அணைகட்டி ; கொடும் திறல் சேனையோடு – மிக்க வலிமையையுடைய வானர சைனியங்களுடன் ; செருக்களத்து – போர்க்களத்திலே ; அவிய – நாசமாக ;

நூறி—பொடியாக அடித்து; தன்திறல் — தனது வலிமை; தசமுகன் - பத்துத்தலைகளையுடைய இராவணனது; வலிமைகண்டு — (முதல் நாள் யுத்தத்திலே) பலம் (குன்றிப் போனதைப்) பார்த்து; இயம்பிய— (அருளிக்) கூறிய; இறைவன்—தலைவன்.

68. சொன்ன நாளின் — (வருவதாகச்) சொன்ன தினத்தில்; முடுகி—விரைந்து; செல்லேலாம் ஆயின் — போகாதிருப்போமானால்; வன்னியில்—நெருப்பிலே; வீழும் — வீழ்ந்திறப்பான்; அன்னவன் — அப்பரதன்; எரி — நெருப்பில்; ஏவி — (தன் வருகையைக் கூறும்படி) முன் அனுப்பி; பொன் நகர் அடைந்தான் - அழகிய அயோத்தி நகரத்தை அடைந்தவன்; புவனம் மூன்றுடையான் - மூவுலகங்களுக்கும் தலைவன்.

69. அரியணை — சிம்மாசனம்; இருவரும் — இலட்சுமணனும் சத்துருக்கினனும்; கவரி — சாமரம்; விரைசெறி — வாசனை மிகுந்த; கமலத்தாள் — லக்ஷ்மி; வெண்ணெயூர்ச் சடையன் மரபு — திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலார் தம்மை ஆதரித்தமையால் அவர் மரபினரைக் கம்பர் இங்கே சிறப்பித்தார்.

## VI. திருவேங்கட சதகம்

இது 'மணவாள நாராயண சதகம்' என்றும் வழங்கும்.

[சதகம்—நூறு செய்யுட்களையுடைய நூல்.]

70. சன்னம் — பிறவி; மெய்ஞ்ஞானபோதம் — உண்மை ஞானமாகிய அறிவு; தனவான் — செல்வமுடையவன்; பூவலம் செய்வது — பூமியை வலமாகச் சுற்றி வருதல்; தருமவான் — அறஞ்செய்பவன்; கீர்த்திமான் — புகழுடையவன்; விவேகி — பகுத்தறிவுள்ளவன்; ரண சங்கிராம வீரன் — பெரிய போர்வீரன்; கருணை — அருள்; காசினி — பூமி; உதரம் — வயிறு; மரு உலாவிய — வாசனைபொருந்திய; வரதன் — வரங்

களைக்கொடுப்பவன் ; வேங்கடராயன் — திருவேங்கட மலையில் நின்றருளும் தலைவராகிய ஸ்ரீநிவாஸன்.

71. தடவரை — பெரியமலை ; சன்னசம்பா — (சிறந்த) சிறிய சம்பாநெல் ; சந்ததமும் — எப்பொழுதும் ; எட்டி — (ஒருவகை) மரம் ; தொனி — ஒலி ; பகர்கின்ற (உயர்த்திக்) கூறப்படுகின்ற ; கனவயது—அதிகவயது ; பல கூட்டம் — அனேகமாகிய திரண்ட செல்வங்கள் ; தேகம் ஆர் வடிவு — அழகின்மிக்க உடம்பு ; குணம் — நற்குணம் ; என்பர் — என்று அறிஞர் கூறுவர்.

## VII. சிலேடைச் செய்யுட்கள்.

[சிலேடை-ஒரு சொற்றொடர் பல பொருள்தருவது.]

72. ஆரும் அலைமகள் — இலக்குமி ; ஆரும் மலைமகள் — பார்வதி ; அம்சக்கரன் — அழகிய சக்கராயுதத்தை யுடையவன் ; அஞ்சு அக்கரன் — பஞ்சாக்ஷரன் ; அஞ்சு அம்பு பெற்ற வேள் — பஞ்சபாணமுடைய மன்மதன் ; அம்சம்பு பெற்றவேள் — அழகிய சிவபெருமான் பெற்ற சுப்பிரமணியர்.

73. அம்மானை - அழகிய மான்வடிவமான மாரீசனை ; அம் மானை - மாதுலனாகிய கஞ்சனை ; ஆதவகுலம் - சூரிய வமிசம் ; யாதவகுலம் - யதுவமிசம் ; மாருதி - வாயு குமாரனான அனுமான் ; வீமன் ; கானத்துவந்தவர் - காட்டில் வந்தவர் ; கானத்து உவந்தவர் - வேணு கானத்தில் சந்தோஷித்தவர்.

PRINTED AT EVERYMANS PRESS, MADRAS.

